## அந்தர்யோக விவரங்கள்

**தூத்துக்குடியில் 18—3—79 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* A.S.K.R. கல்யாண மண்டபம்

*நேரம்:* காலை 10-00 மணிமுதல் பகல் 12-30 மணிவரை

*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

**திருச்சி ஜில்லா—துறையூரில் 18—3—79 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* செங்குந்தர் உயர்நிலைப்பள்ளி

*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்

**மதுரை ஜில்லா—உசிலம்பட்டியில் 18—3—79 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* சரஸ்வதி நாடார் மேல்நிலைப்பள்ளி

*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**மதுரையில் 25—3—79 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* ஸ்ரீ ராமகிருஷ்ண பிரார்த்தனை ஆலயம் (தினமணி அலுவலக சமீபம்)

*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

*உணவு வசதி:* நேரில் பகல் உணவுக்கும், மாலை தேநீர்க்கும் ரூ. 1-50 செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

**கோவை ஜில்லா—பவானியில் 1—4—79 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* பவானி-ஈரோடு மெயின்ரோடிலுள்ள ராஜாராம் அய்யர்-குட்டி செட்டியார் தோப்பு (காளிங்கராயன் வாய்க்கால் பாலத்திற்குத் தென்புறம்)

*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**கரூரில் 8—4—79 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* பசுபதிபாளையம் விவேகானந்த கல்வி நிலையம்

*நேரம்:* மாலை 5-00 மணி முதல் 7-30 மணி வரை

*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

**மதுரை ஜில்லா—மேலூரில் 13—4—79 வெள்ளிக்கிழமை**

*இடம்:* சபரிமலை ஐயப்பசுவாமி பிரார்த்தனை மண்டபம்

*நேரம்:* காலை 10-00 மணி முதல் மாலை 4-30 மணி வரை

*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**மதுரை ஜில்லா—திருவேடகத்தில் 15—4—79 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* விவேகானந்த கல்லூரி

*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

*உணவு வசதி:* நேரில் பகல் உணவிற்கு ரூ 1-00ம், மாலை சிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 28 | காளயுக்தி ஹூ பங்குனி மீ | ஆரம் 3 |
|---|---|---|

## பொருளடக்கம்



## சந்தா விவரம்

டிபாஸிட் சந்தா: ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும்வரையில் மாதந்தோறும் தர்மசக்கரப் பத்திரிகை தங்களுக்கு வந்து கொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தாச் செலுத்திப் புதுப்பிக்கவேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

ஆண்டு சந்தா: ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

சகாய சந்தா: தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்துச் செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடு செய்து கொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்துச் செலுத்த இயலுகிற வர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

இலவச சந்தா: தமிழக அரசாங்கத்தால் தமிழ்நாட்டில் 1495 பொது நூலகங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. அவை அனைத்திற்கும் தர்ம சக்கரம் இவ்வாண்டு ஆவணி மாதம் முதல் தொடர்ந்து அன்பர்களின் உதவியால் இனமாக அனுப்பப்பெறுகிறது. நூலக நிர்வாகியிடம் கேட்டுப் பெற்றுப் படித்துப் பயனடையக் கோருகிறோம். இந்த ஞானயக்ஞத்துக்குப் பொருளுதவி செய்ய விரும்புவோர் தர்ம சக்கரம், திருப்பராய்த் துறை-639 115, திருச்சி மாவட்டம் என்ற விலாசத்துக்கு எழுதித் தெரிந்துகொள்ளலாம்.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00. வெளிநாடு வருட சந்தா ரூ. 20-00**

திருநெல்வேலி ஜில்லா

# திருச்செந்தூரில் அந்தர்யோகம்

## 24 & 25—3—79 சனி, ஞாயிறு

1979ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 24ஆம் தேதி சனி, 25ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை ஆகிய இரண்டு நாட்களிலும் கீழ்க்கண்ட வாழ்க்கை முறைப்படி திருப்பராய்த்துறை ஸ்ரீராமகிருஷ்ண தபோவனம் ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர் அவர்கள் தலைமையில் திருச்செந்தூர் ஆதித்தனுர் கல்யாண மண்டபத்தில் அந்தர்யோகம் நடைபெறும்.

அந்தர் யோகத்தில் கலந்துகொள்ள விரும்பும் அன்பர்கள், உணவு, ஜாகைக்காக நபர் ஒன்றுக்கு ரூ. 12-00 ஐ மார்ச்சு மாதம் 22ஆம் தேதிக்குள் திரு. S. K. S. ராஜமணி நாடார், 65 C, தெற்கு ராஜவீதி, தூத்துக்குடி, திருநெல்வேலி மாவட்டம் என்ற விலாசத்திற்கு மணியார்டர் மூலமோ, நேரிலோ செலுத்திப் பெயர்களை 22—3—79க்குள் பதிவு செய்து கொள்ளவேண்டும். பணம் அனுப்பி கலந்து கொள்ளாத அன்பர்களுக்குத் தொகை திருப்பித்தர இயலாது. தாய்மார்களுக்குத் தங்க தனி இடவசதி உண்டு. ஆனல் கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும் பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள். 23—3—79 வெள்ளிக்கிழமை மாலை 5 மணிக்குள் திருச்செந்தூர் ஆதித்தனுர் கல்யாண மண்டபத்திற்கு அன்பர்கள் வந்து சேரவேண்டும்.

25—3—79 அன்று மாலை 5 மணிக்கு அந்தர்யோகம் முடிவு பெறும். தங்கள் சௌகரியத்திற்குத் தேவையான படுக்கை முதலியவற்றைத் தாங்களே கொண்டு வரவேண்டும்.

### சாதனை முறை

**காலை**

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| துயில் எழுந்திருத்தல் | 5-00 | |
| எல்லாரும் ஒன்றுகூடி நாமஜபம் | 5-30 | 6-00 |
| நீராடல் முதலியன | 6-00 | 7-30 |
| காலை தியானம் | 7-30 | 8-00 |
| சிற்றுண்டி | 8-00 | 9-00 |
| காலை உபந்யாசம் | 9-00 | 10-00 |
| மௌனம் | 10-00 | 11-00 |
| பஜனை | 11-00 | 11-45 |
| கோவில் வழிபாடு | 11-45 | 12-30 |

**மாலை**

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| போஜனம், ஓய்வு | 12-30 | 3-00 |
| மாலை உபந்யாசம் | 3-00 | 4-00 |
| தனியாக வாசித்தல் | 4-00 | 4-30 |
| பானம், உலாவல், நீராடல் முதலியன | 4-30 | 6-30 |
| நாம ஜபம் | 6-30 | 7-00 |
| தியானம் | 7-00 | 7-30 |
| இரவு போஜனம் | 7-30 | 8-30 |
| ஸத் ஸம்பாஷணை | 8-30 | 9-30 |

S. K. S. ராஜமணி நாடார், தூத்துக்குடி.
காரியதரிசி

சாந்தானந்த
ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

---

திருச்செந்தூர் அந்தர்யோகத்தில் தபோவன வெளியீடுகள் விலைக்குக் கிடைக்கும்

# ஸ்ரீ தாயுமான சுவாமி கோயில் திருப்பணி



ஸ்ரீ தாயுமான சுவாமிகள் கோயில் திருப் பணிக்குத் தொகை சுமார் ஆறு லக்ஷம் ரூபாய் ஆகுமென்று மதிப்பிடப் பட்டிருக்கிறது. பிப்ரவரி மாதம் முடிய வந்துள்ள நன்கொடை களின் தொகை ஈண்டு வெளியிடப்படுகிறது.

சமாதிக்கோயில் அதற்குச் சொந்தமாயுள்ள சுமார் இரண்டரை ஏக்கர் நிலத்தில் தென் மேற்கு மூலையில் அமைந்திருக்கிறது. சமாதிக் கோயிலுக்கு அருகில் தென்புறத்தில் மேற்கி லிருந்து கிழக்கு நோக்கி சாலை ஒன்று போய்க் கொண்டிருக்கிறது. அந்தச் சாலைக்குத் தென் புறத்தில் சுமார் ஐந்து வீடுகளில் மக்கள் குடி யிருக்கின்றனர். இந்த ஐந்து வீடுகளிலும் சுமார் இருபதடி அகலம் நூறு அடி நீளம் இடம் விலைக்கு வாங்கினால் சாலையை அப்படி வாங் கிய இடத்தில் அமைத்துக்கொண்டு கோயிலை யும் அதன் முன் மண்டபத்தையும் முறையாக அமைப்பதற்கு ஏற்ற இடவசதி கிடைக்கும். ஆகையால் இந்த ஐந்து வீட்டுக்காரர்களோடு தேவையான இடம் தருவதற்கான பேச்சு வார்த்தைகள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. அவர்களும் சம்மதம் கொடுக்கின்றனர். கிரயத் தைப் பற்றிதான் இன்னும் முடிவு காண வில்லை.

## 1979 பிப்ரவரி மாத நன்கொடை விவரம்

| தேதி | விலாசம் | | ரூபாய் |
|---|---|---|---|
| | ஜனவரி மாதம் முடிய நன்கொடை வசூல் | | 1 68 828 |
| 1–2–79 | ஸ்ரீ N.S.K.P. காமராஜ் & ஸ்ரீ N.S.K.P. கோபால் & ஸ்ரீ N.S.K.P. அச்சுதன் | கூடலூர், கம்பம் | 2 100 |
| | ஸ்ரீமதி N. தமயந்தி, சாரதாதேவியார் சங்கம் | தூத்துக்குடி | 250 |
| | ஸ்ரீ L.R.S.R. சுப்புசாமி கவுடர் | காமயகவுண்டன்பட்டி | 101 |
| | ,, K. ராமசாமிநாயுடு | R.S. புரம், கோவை | 100 |
| | ஸ்ரீமதி யசோதா | கடத்தூர் கிராமம், கோவை | 100 |
| | ஓர் பக்தை | சென்னை | 100 |
| | ஓர் அன்பர் | இலத்தூர் | 100 |
| 3–2–79 | ஸ்ரீ வ. வை. வேலப்ப நாயக்கர் | தேனி | 108 |
| | ,, V.A.S. பாலப்ப நாடார் | தூத்துக்குடி | 101 |
| 4–2–79 | ,, G.R. கோவிந்தராஜுலு & சன்ஸ் | பீளமேடு, கோவை | 10 001 |
| | ,, G. வெங்கடசுவாமி & கஸ்தூரி டிரஸ்ட் | கோவை | 5 000 |
| 5–2–79 | கால்டுவெல் ஸ்பிரிங் மில்ஸ் பிரைவேட் லிட் | ,, | 3 000 |
| | தி நாராயணசாமி சாரிட்டி டிரஸ்ட் | ,, | 2 500 |
| 6–2–79 | ஸ்ரீ K.M. குப்புசாமி முதலியார் & சன்ஸ் | ஆங்கியம், ,, | 101 |
| 8–2–79 | M/s. நெல்சன் & கோ | தூத்துக்குடி | 250 |

| | | | |
|---|---|---|---|
| 8-2-79 | ஸ்ரீ N.P. குருசாமி | பெருமாள்புதூர் | 201 |
| | ,, P. அருணைசலம் செட்டியார் | திருப்பூர் | 150 |
| | ஸ்ரீமதி B. தவமணி அம்மாள் | சுருளிப்பட்டி | 101 |
| | ,, M. அம்மணி அம்மாள் | கம்பம் | 101 |
| | ,, S.M. சரஸ்வதி | சேலம் | 100 |
| 9-2-79 | ஸ்ரீ K.S. வேலாயுதம் | ஜாரிகொண்டலாம்பட்டி | 100 |
| 10-2-79 | சொஸைட்டி புராகிரசிஸ்ட் | பாண்டிச்சேரி | 101 |
| 12-2-79 | ஸ்ரீ M. வைத்திலிங்கம் | மதுரை | 100 |
| 13-2-79 | ஸ்ரீமதி K. ரெத்னம் நாடார் சரஸ்வதி ஹையர்செகண்டரிஸ்கூல் | தேனி | 115 |
| | ஸ்ரீ T. கிருஷ்ணசாமி செட்டி | கிருஷ்ணகிரி | 101 |
| 14-2-79 | ராம்நாராயண் மில்ஸ் லிமிடெட் | கோவை | 3 000 |
| | தி. விஜயலெக்ஷ்மி மில்ஸ் லிமிடெட் | ,, | 3 000 |
| | M/s. புளுமௌன்ட் சுவிட்ச்கியர்ஸ் அசோசியேட்ஸ் (பி)லிட் | கோவை | 2 500 |
| | D. P. F. டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட் | ,, | 1 500 |
| | ஸ்ரீ ராம லெக்ஷ்மண & கோ | சேலம் | 1 221 |
| | ஸ்ரீ A. K. பொன்னுசாமி & கோ | கோவை | 1 001 |
| | கணபதி இன்ஜினியரிங் மேனிபேக்சரர்ஸ் | ,, | 1 001 |
| | ஸ்ரீமதி தேவகி அம்மாள் | ,, | 501 |
| | Dr. K. R. வெங்கடாசலபதி | ,, | 500 |
| | பிரகாஷ் இன்ஜினியரிங் கம்பெனி | ,, | 300 |
| | K. A. C. எக்யூப்மென்ட்ஸ் கோ, கவண்டம்பாளையம், | ,, | 300 |
| | ஸ்ரீமதி தங்கத்தாய் ரத்னம், அரசன் ஆட்டோமோபைல்ஸ் | திருநெல்வேலி | 250 |
| | டெக் சாரிஸ் மேனி பேக்சரர்ஸ், கணபதி | கோவை | 250 |
| | பாலசுப்பிரமணியா பவுண்டரி | ,, | 250 |
| | தி பர்பெக்ட் இன்ஜினியரிங் கம்பெனி G. N. மில்ஸ் போஸ்ட் | ,, | 250 |
| | கோபாலகிருஷ்ண இண்டர்ஸ்டிரீஸ் படேல்ரோடு | ,, | 200 |
| | டீலக்ஸ் பவுண்டரி ,, | ,, | 150 |
| | ஸ்ரீ P. A. P. சிதம்பர நாடார் | விருதுநகர் | 150 |
| 15-2-79 | எல்லன் இன்டஸ்டிரீஸ் பீளமேடு | கோவை | 1 016 |
| | சுப்பையா பவுண்டரி அவினாசி ரோடு | ,, | 250 |
| | ரத்னம் ஆட்டோமோபைல்ஸ் | பாளையம்கோட்டை | 250 |
| | தி கோயம்புத்தூர் இன்ஜினியரிங் புராடெக்ட்ஸ் | கோவை | 150 |
| | ஸ்ரீ P. ஸ்ரீனிவாசன் திலக்நகர் | பம்பாய் | 100 |
| 16-2-79 | ஸ்ரீ கோபாலகிருஷ்ண மில்ஸ் (பி)லிட்., | கோவை | 1 000 |
| | ஸ்ரீ ராமகிருஷ்ண மில்ஸ் (கோயம்புத்தூர்) லிமிடெட் | ,, | 1 000 |
| | கார்த்திகேயா பவுண்டரி பாப்பநாயக்கன் பாளையம் | ,, | 500 |
| | ஸ்ரீ V. N. சினிவாஸலு நாயுடு வையம்பாளையம் | ,, | 500 |
| | தி ஜெனரல் மோட்டார் புராடெக்ட்ஸ் மேட்டுப்பாளையம் ரோடு | ,, | 500 |
| | அசோசியேடட் இன்ஜினியரிங் ஒர்க்ஸ், தெலுங்குபாளையம் | ,, | 250 |
| | ஸ்ரீ நிர்மலன் சுங்கைபட்டாணி | மேற்கு மலேசியா | 108 |
| | லோடஸ் பவுண்டரி பாப்பநாயக்கன் பாளையம் | கோவை | 101 |

| | | | |
|---|---|---|---|
| 16–2–79 | அக்ஸார் கெமிக்கல்ஸ் | தூத்துக்குடி | 100 |
| 17–2–79 | லெக்ஷ்மி மிஷின் ஒர்க்ஸ் லிட்., பெரியநாயக்கன் பாளையம் | கோவை | 4 000 |
| | சதர்ன் இன்ஜினியரிங் இண்டஸ்டிரீஸ் | ,, | 500 |
| | ஸ்ரீ E. புருஷோத்தம் மில்ரோடு | ,, | 201 |
| | ஸ்ரீ K. ராஜு நாயுடு டாட்டாபேட் | ,, | 200 |
| | ஸ்ரீ R. P. S. வேணுகோபால் இளம்பிள்ளை | சேலம் ஜில்லா | 151 |
| | பரதன் டிம்பர் மார்ட் மில்ரோடு | கோவை | 150 |
| | ஸ்ரீ ஆண்டாள் மாதர்சங்கம் குகை | சேலம் | 135 |
| | ஸ்டாப் மெம்பர்ஸ் & ஒர்க்கர்ஸ், புளுமவுண்ட் சுவிட்ச்கியர்ஸ் | கோவை | 315 |
| 19–2–79 | தி லெக்ஷ்மி மில்ஸ் கம்பெனி லிட்., பாப்பநாயக்கன் பாளையம் | ,, | 4 000 |
| | பழனி ஆண்டவர் மில்ஸ் லிட்., உடுமலைப்பேட்டை | ,, | 2 000 |
| 21–2–79 | தி விஜயகுமார் மில்ஸ் லிட்., கலயம்புதூர் | பழனி | 2 500 |
| | கோங்கரார் ஸ்பின்னர்ஸ் (பி)லிட்., உடுமலைப்பேட்டை | கோவை | 2 500 |
| | Mrs. சகுந்தலா லெக்ஷ்மிபதி பேரக்ஸ்கேட்ரோடு | சென்னை | 1 001 |
| | ஸ்ரீ S. மல்லி செட்டியார் வனவாசி | சேலம் | 501 |
| | ஸ்ரீ M. S. ராமையா பிள்ளை சிதம்பரநகர் | தூத்துக்குடி | 251 |
| | ஸ்ரீ R. M. S. சுப்பிரமணி பெரம்பூர் | சென்னை | 100 |
| | ஸ்ரீமதி மங்களேஸ்வரி ,, | ,, | 100 |
| | ஸ்ரீ K. ராஜகோபால பிள்ளை | திருவாரூர் | 100 |
| 22–2–79 | மாணிக்க R.M. சங்கரநாராயண அய்யர் அன்னதான தர்மநிதி | மதுரை | 101 |
| | ஸ்ரீ R. V. ராஜலிங்கம் செட்டியார் | கரூர் | 101 |
| | ஸ்ரீ ஜெயராமன், ஜெயலெட்சுமி | தேவக்கோட்டை | 101 |
| 23–2–79 | தி நரசிம்ஹா மில்ஸ் (பி)லிட்., நரசிம்மநாயக்கன் பாளையம் | கோவை | 3 000 |
| | தண்டாயுதபாணி பவுண்டரி (பி)லிட்., பாப்பநாயக்கன் பாளையம் | ,, | 1 001 |
| | ஸ்ரீ S. K. நாகலிங்கம் செட்டியார் | விருதுநகர் | 301 |
| 23–2–79 | ஸ்ரீ ச. ராஜமாணிக்க நாடார் | அருப்புக்கோட்டை | 200 |
| | ஸ்ரீமதி மீனாக்ஷிதியாகராஜன் ராமமூர்த்தி ரோடு | விருதுநகர் | 150 |
| | ஸ்ரீ V. S. நரசிம்மன் விவேகானந்த கல்லூரி | திருவேடகம் | 101 |
| | ஸ்ரீ A. மகாதேவன் | மதுரை | 101 |
| | புரோக்கர் ஸ்ரீ கொ. குருசாமி நாடார் | அருப்புக்கோட்டை | 100 |
| | ஸ்ரீ I. மாசிலாமணி | புனலூர், கேரளா | 100 |
| | ஸ்ரீ M. அருணசல ஐயா | ஆத்தூர், சேலம் | 100 |
| 24–2–79 | ஆசிரியைகளும் மாணவிகளும், சுப்பையா வித்தியாலயம் பெண்கள் மேல் நிலைப்பள்ளி, | தூத்துக்குடி | 320 |
| | ஸ்ரீ R. வாசுதேவ ரெட்டியார் | சின்ன காஞ்சீபுரம் | 251 |
| | திருவருள் சக்தி சமரச சன்மார்க்க மாதர் சங்கம், மேட்டுப்பாளையம் | கோவை | 100 |
| 26–2–79 | ஸ்ரீ S. ரத்னம், அரசன் ஆட்டோமொபைல்ஸ், | பாளையங்கோட்டை | 250 |
| | ஸ்ரீ கிருஷ்ண பவுண்டரி பாப்பநாயக்கன் பாளையம், | கோவை | 250 |
| | ஸ்ரீ C. ராமசாமி ,, | கோவை | 100 |

| | | | | |
|---|---|---|---|---|
| 26-2-79 | M/s ரேணுகா இண்டஸ்ட்ரீஸ் பாப்பநாயக்கன் பாளையம் | | கோவை | 100 |
| 28-2-79 | ஸ்ரீ A. வெங்கடசாமி நாயுடு, | வையம்பாளையம் | கோவை | 506 |
| | சக்தி சங்கம், ராமமூர்த்தி ரோடு | | விருதுநகர் | 400 |
| | ஸ்ரீ A. புஞ்சோலை | நரசிம்மபுரம் | கரூர் | 375 |
| | ஸ்ரீ P. R. M. ரெத்னம் செட்டியார் | ஆலங்குடி | புதுக்கோட்டை | 200 |
| | ஸ்ரீமதி ஜெயலெக்ஷ்மி | ஜெயநகர் | பெங்களூர் | 100 |
| | ஸ்ரீமதி கல்யாணி அம்மா லலிதா பாலிகாம்மா | | ,, | 100 |
| | ஸ்ரீ R. D. குல்கர்ணி | ஜெயநகர் | ,, | 100 |
| | ஸ்ரீ T. P. ராமசாமி கவுண்டர் | | கரூர் | 100 |
| | ஸ்ரீ அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் | | திருச்சி | 100 |
| | ஸ்ரீ சி. பழனிசாமி | அன்னவாசல் | புதுக்கோட்டை | 100 |
| | ஸ்ரீ பொன்சுப்பையா | | தூத்துக்குடி | 100 |
| | ஸ்ரீமதி சோ. ரத்தினத்தாயம்மாள் | பெருமாள்புரம் | திருநெல்வேலி | 100 |
| | ஸ்ரீ சொ. ப. சுப்பிரமணியபிள்ளை | | விருதுநகர் | 100 |
| | ஸ்ரீ R. சோமசுந்தரம் | | ,, | 100 |
| | ஸ்ரீ M. S. P. K. சோமசுந்தர நாடார் & சன்ஸ் | | ,, | 100 |
| | ஸ்ரீமதி V. அமிர்தம்மாள் & கோ | | ,, | 100 |
| | ஸ்ரீ R. குருசாமி செட்டியார் | | ,, | 100 |
| | M/s. மீரா எலக்டிரிகல்ஸ் | அவினாசிரோடு | கோவை | 100 |
| | ,, M. ராஜீ & சன்ஸ் | காட்டூர் | ,, | 100 |
| | ,, ஸ்ரீ வாட்சா இன்ஜினியரிங் & டிரேடிங் கம்பெனி | மேட்டுப்பாளையம் ரோடு | ,, | 100 |
| | ,, பிரகாஷ் எலக்டிரிகல்ஸ் அவினாசி ரோடு | | ,, | 100 |
| | ,, ஸ்ரீனிவாஸ் & கோ., ராமசாமி ஐயங்கார் ரோடு | | ,, | 100 |
| | ,, C. ராஜு நாயுடு & சன்ஸ் R. S. புரம் | | ,, | 100 |
| | ,, வெங்கடேசன், கலப்பட்டி | | ,, | 100 |
| | ,, J. G. புஜாரா & சன்ஸ் R. S. புரம் | | ,, | 100 |
| | ,, ரெங்கசாமி ராமகிருஷ்ணன் & கோ, திருமங்கலம் | | ,, | 100 |
| | ,, ஜெயலெக்ஷ்மி யார்ன் & கோ | | ஈரோடு | 100 |
| | ஸ்ரீ M. V. A. மாணிக்க நாடார் | | அருப்புக்கோட்டை | 100 |
| | ,, K. K. ஆறுமுகம் கரட்டூர் | | கோவை | 101 |
| | ,, S. பெரியண்ணன் முதலியார் & கோ | | ஈரோடு | 101 |
| | ,, R. பொங்கியா கவுண்டர் | மூங்கித்தொழுவு | கோவை | 100 |
| | ,, K. ரெங்கசாமி பிள்ளை | | திருச்சி | 100 |
| | ,, P. தியாகராஜன் | | பென்னாடம் | 100 |
| | ,, வ. கு. ஆ. சிவஞானம் செட்டியார் | | பரமக்குடி | 100 |
| | ரூ. 100க்கு கீழ்வந்த நன்கொடைகள் | | | 3 245 |
| | ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுல மாணவர்கள் மூலம் ரூ. 100க்கு கீழ்வந்த நன்கொடைகள் | | | 3 777 |
| | | | ஆகக் கூடுதல் ரூ. | 2 53 097 |






# தர்ம சக்கரம்

*அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்*
*பிறவாழி நீந்தல் அரிது.*

**சக்கரம் 28** | **காளயுக்தி ஹு பங்குனி மீ** | **ஆரம் 3**


## பிரார்த்தனை

शिवाकान्त शम्भो शशाङ्कार्धमौले महेशान शूलिन् जटाजूटधारिन् ।
त्वमेको जगद्व्यापको विश्वरूपः प्रसीद प्रसीद प्रभो पूर्णरूप ॥

— शङ्कराचार्यः

*சிவாகாந்த சம்போ சசாங்கார்த மௌலே*
*மஹேசான சூலின் ஜடாஜூடதாரின் ।*
*த்வமேகோ ஜகத்வ்யாபகோ விச்வரூப:*
*ப்ரஸீத ப்ரஸீத ப்ரபோ பூர்ணரூப ॥*

அம்பிகை நாதா, சம்புவே, சந்திரசேகரா, ஆக்கத்தை அளிப்பவரே, சூலத்தைத் தரித்திருப்பவரே, ஜடா முடியுடன் இருப்பவரே, அண்டம் எங்கும் வியாபித்துள்ள ஒருவரே, பிரபுவே அருள்புரிவீராக, அருள்புரிவீராக.

*— சங்கராச்சாரியர்*

அன்புறு சிந்தைய ராகி யடியவர்
நன்புறு நல்லூர்ப் பெருமண மேவி நின்(று)
இன்புறும் எந்தை இணையடியேத்துவார்
துன்புறு வாரல்லர் தொண்டுசெய் வாரே.

*— திருஞானசம்பந்தர்*

# அருள் விருந்து



நலனும், தெய்விகமும் ஒன்று என்பதை அறியாதவர் யார்?

மனதைப் பயன்படுத்தாவிட்டால் அது மழுங்கிப் போகிறது.

பொறுமையும், பரநலசேவையும் தெய்விகப் பண்புகளாகின்றன.

நெறி வழுவுகிறவனிடமிருந்து எந்த உதவியையும் பெறலாகாது.

அறநெறியினின்று பிறழ்வன அனைத்தும் பாழ்பட்டுப் போகின்றன.

எங்குத் தூய அன்பு இருக்கிறதோ, அங்குச் சுயநலம் இடம்பெறுவதில்லை.

சிரமப்படாது சுகஜீவனம் பண்ண விரும்புகிறவன் மேன்மையுறமாட்டான்.

நலன்போன்று தென்படுகின்ற கேட்டை மனிதன் ஏற்றுக்கொள்ளலாகாது.

பணிவுடன் குழந்தைகளோடு பழகுகிறவர்களுக்குப் பரஞானம் வாய்க்கிறது.

சான்றோன் ஒருவனிடத்துக் குழந்தையின் சரளசுபாவம் இயல்பாக வந்தமைகிறது.

எண்ணத்தின் முழுமையை உள்ளபடி விளக்குதற்குச் சொல்லுக்கு இயலுவதில்லை.

உள்ளத்தைத் தூய்மைப்படுத்துகின்றவனுக்கு இறைவனுடைய அருள் சொந்தமாகிறது.

ஒவ்வொரு கணப்பொழுதையும் நன்கு பயன்படுத்து. அப்பொழுது உன் வாழ்வு பெருவாழ்வு ஆகும்.

வாழ்வு என்னும் கடலில் கொந்தளிப்பு ஏற்படலாம். ஆனால் உன் மனது என்னும் படகை உறுதியுடன் செலுத்து.

உலக ஆசைகள் அனைத்தும் நிறைவேறுவதில்லை. ஆதலால் விவேகத்தால் அவைகளை ஒதுக்கித் தள்ளுதல் வேண்டும்.

நேர்மையான வாழ்வை அறிந்துகொள்ளுதற்குக் கல்வி தேவையில்லை. நேர்மையை மனதினுள் ஒளிரும் பேருணர்வு இனிது விளக்குகிறது.

தேனீ புஷ்பத்தின் பாங்கைப் பாழ்படுத்தாது அதினின்று தேனை எடுக்கிறது. அங்ஙனம் மனிதன் உலகுக்குத் தீங்கு விளைவிக்காது தன் தேவைகளை அதனிடத்திருந்து எடுத்துக்கொள்ள வேண்டும்.

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

மகிமசரணிடம் பரமஹம்சர் பகர்வதாவது: “வேதாந்த சாஸ்திரப்படி பிரபஞ்சத்தைப் பற்றி விசாரணை பண்ணுகிறவர்கள் யுக்தி பூர்வமாக ஒரு முடிவுக்கு வருகிறார்கள். தென்படுகிற இவ்வுலகம் கனவுக்கு நிகரானது. கனவு காண்கின்ற பொழுது தென்படுகின்ற உலகம் கனவு இருக்கும் வரையில் உண்மையான உலகமாக எண்ணப்படுகிறது. கனவினின்று விழித்துக்கொண்ட பிறகு கனவு உலகம் வெறும் மனதின் விவகாரம் என்னும் முடிவுக்கு மனிதன் வருகிறான். ஜாக்ரதாவஸ்தையில் மனிதன் காண்கின்ற உலகம் மனதின் விவகாரத்திற்கு ஏற்றதாம். பரமாத்மா பிரபஞ்சத்திற்குச் சாட்சியாக அமைந்திருக்கிறது. ஜாக்ரதாவஸ்தை, சொப்பனவஸ்தை, சுஷுப்தி அவஸ்தை ஆகிய மூன்று அவஸ்தைகளுக்கும் அது சாட்சியாயிருக்கிறது. இந்த மூன்று அவஸ்தைகளை முறையே நனவு, கனவு, கனவற்ற உறக்கம் என இயம்பலாம். இந்த வேதாந்தக் கோட்பாடு உம்முடைய மனப்பான்மைக்கு ஒத்ததாக இருக்கிறது. ஞானி ஒருவன் கனவுஉலகுக்கு என்ன மதிப்புத் தருகிறானோ அதே மதிப்பைத்தான் நனவு உலகுக்கும் அவன் தருகிறான். உம்முடைய இயல்புக்கு ஒத்துள்ள கதை ஒன்றைக் கூறுகிறேன் கேளும்.

“நாட்டுப்புறத்தில் குடியானவன் ஒருவன் வசித்துவந்தான். அவன் ஒரு பண்பட்ட ஞானி. பயிர்த்தொழில் வாயிலாக அவன் தன்னுடைய ஜீவனத்தை நடாத்தி வந்தான். இல்வாழ்க்கையை அவன் ஏற்று வந்தான். பல வருஷங்களுக்குப் பிறகு அவனுக்கு மகப்பேறு வாய்த்தது. அந்தமகனுக்கு ஹரு என்னும் பெயர் வைத்திருந்தான். செல்வனைப் பெற்றோர்கள் உள்ளன்போடு நேசித்தார்கள். அப்படி அவர்கள் நேசித்தது இயல்பே. ஏனென்றால் குடும்பத்துக்கு அவன் ஒருவனே மாணிக்கமாக மிளிர்ந்தான். அக்குடியானவன் ஒரு பக்தனாயிருந்தபடியால் கிராமவாசிகள் அவனை உள்ளன்போடு நேசித்தார்கள். ஒருநாள் குடியானவன் தன் தோட்டத்தில் வேலை செய்துகொண்டிருந்தான். அப்பொழுது அக்கம்பக்கத்துக்காரன் ஒருவன்வந்து அவன் மகன் ஹருவுக்குக் காலரா கண்டிருப்பதாகத் தெரிவித்தான். அக்கணமே அக்குடியானவன் வீட்டுக்குத் திரும்பிப்போய்த் தன் மகனுக்குச் சிகிச்சை பண்ணுவதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்தான். ஆனால் ஹரு மடிந்துபோனான். அதைக்குறித்து குடும்பத்தார் அனைவரும் துயரத்தில் ஆழ்ந்து மூழ்கினர். ஆனால் குடியானவன் மட்டும் அந்த விபத்தினால் பாதிக்கப்பட்டவனாகத் தென்படவில்லை. வழக்கமான வாழ்க்கை முறையில் தான் அவன் ஈடுபட்டிருந்தான். வருந்துவதில் பயன் ஒன்றுமில்லையென்று அவன் தன் வீட்டாருக்கு ஆறுதல் கூறினான். பிறகு வழக்கம் போல் அவன்தன் தோட்டத்திற்குப் போனான். வீட்டுக்குத் திரும்பி வந்த பிறகு தன் மனைவியானவள் அதிகப்படியான துயரத்தில் மூழ்கியிருந்ததைப் பார்த்தான். இல்லாள் அவனுக்கு இயம்பியதாவது: ‘தாங்கள் கல்நெஞ்சம் படைத்தவர் ஆவீர்! மடிந்துபோன மகனுக்காகத் தாங்கள் ஒரு சொட்டுக் கண்ணீரும் சிந்தவில்லை.’ அமைதியாகக் குடியானவன் விடை கொடுத்ததாவது: ‘நான் ஏன் வருந்தவில்லை என்பதை உனக்கு எடுத்து இயம்பலாமா? நேற்று இரவு நனவுக்கு நிகரான கனவு ஒன்றைக் கண்டேன். நான் ஓர் அரசன் ஆயிருந்ததாகக் கனவு கண்டேன். அக்கனவில் எனக்குப் புதல்வர்கள் எட்டுப் பேர் வாய்த்திருந்தனர். அவர்களைக் குறித்து நான் பெருமகிழ்வுற்றிருந்தேன். பிறகு அக்கனவு மறைந்து போயிற்று. இப்பொழுது ஐயம் ஒன்று என் உள்ளத்தைக் குழப்புகிறது. மறைந்து பட்டுப் போன புதல்வர்கள் எட்டுப் பேர்களுக்காக கண்ணீர் சொட்டுவதா? அல்லது ஒரு மகனாகிய இந்த ஹருவுக்காகக் கண்ணீர் சொட்டுவதா? இதுதான் நான் அடைந்திருக்கும் மனக் குழப்பம்.’

“அந்தக் குடியானவன் ஒரு ஞானி ஆதலால் தான் நனவுநிலை கனவுநிலைக்கு நிகராக நிலை

யற்றது என்பதை அவன் தெளிவுற அறிந்திருந்தான். நிலைபேறுடைய வஸ்து ஒன்றுதான் உள்ளது. அது ஆத்மா.

ஆயினும் என்னைப் பொறுத்தவரையில் எல்லாவற்றையும் நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். ஜாக்ரதாவஸ்தை, சொப்பனவஸ்தை, கனவற்ற ஆழ்ந்த உறக்கம் ஆகிய மூன்று அவஸ்தைகளையும் அவைகளுக்குப் பொதுவாக உள்ள துரியநிலையையும் நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். அவஸ்தாத்ரயம் என இயம்பப்பெறும் இந்த மூன்றுவித மனோ விகாரங்களும் எனக்குச் சம்மதம். வேதாந்திகள் பிரம்மத்தைச் சத்தியம் என்றும், மாயப் பிரபஞ்சத்தை வெறும் தோற்றம் என்றும் கருதுகின்றனர். ஆனால் எனக்கோ பிரம்மமும் சத்தியம், மாயப் பிரபஞ்சமும் சத்தியம், இதில் வாழ்ந்துவரும் ஜீவர்களும் சத்தியம். இதில் ஏதேனும் ஒன்றை நான் புறக்கணிப்பேனாகில் நிறைபொருளை நான் ஏற்றுக்கொண்டவனாக மாட்டேன்."

பக்தர் ஒருவர்: "நிறை பொருள் என்றீர்களே அது யாது?"

(எல்லாரும் நகைக்கின்றனர்)

பரமஹம்சதேவர்: "பிரம்மத்தின் விபூதிகளாகப் பிரபஞ்சமும் அதிலுள்ள ஜீவ வகைகளும் இருக்கின்றன. சாதனத்தின் ஆரம்ப தசையில் சாதகனொருவன் நித்திய, அநித்திய வஸ்து விசாரம் செய்கிறான். அநித்தியமாயுள்ள ஜகத்தையும் ஜீவர்களையும் 'இது அன்று, இது அன்று' என்று கருதி ஒதுக்கித் தள்ளுகிறான். ஆனால் சாதகனொருவனிடம் ஜீவாத்மபோதம் இருக்கும் வரையில் அதாவது சரீரத்தைத் தன்மயமாய்க் கருதிக்கொண்டிருக்கும்பொழுது ஈஸ்வரன்தான் அனைத்துமாயிருக்கிறான் என்னும் உணர்ச்சியிலிருந்தாக வேண்டும். பிரபஞ்சத்துக்குரிய இருபத்து நான்கு தத்துவங்களாக இலங்குபவன் ஈசனே.

"மானுடனொருவன் வில்வப்பழத்தின்முக்கியமான பகுதி என்று பகருகிறபொழுது அப்பழத்திலுள்ள சதைப்பற்றைக் குறிக்கிறான். அப்பழத்திலுள்ள விதைகளையும் மேல் ஓட்டையும் அப்பொழுது அவன் புறக்கணிக்கிறான். ஆனால் அம்மனிதன் வில்வப்பழத்தினுடைய நிறைபொருளை அல்லது முழுப்பகுதியைக் கருத்தில் வாங்கிக் கொள்ளுகிறபொழுது சதைப்பற்றை மட்டும் பிரித்து வைத்து அவன் பேசுவதில்லை. சதைப்பற்று, விதைகள், மேல் ஓடு ஆகிய எல்லாப் பகுதிகளையும் சேர்த்து அங்கீகரிக்க அவன் கடமைப்பட்டிருக்கிறான். பழத்தினுள் விதைகளும் மேல் ஓடும் சதைப் பற்றும் ஒன்று சேர்ந்து இருக்கின்றன. வில்வப்பழம் என்று பகரும் பொழுது இந்த மூன்றையும் ஒன்று சேர்த்தே நாம் பொருள்படுத்துகிறோம்.

"பரம்பொருளினிடத்து நித்தியம், லீலை என இயம்பப்பெறுகிற இரண்டு கூறுகளிருக்கின்றன. ஆத்ம சொரூபத்தை நித்தியம் என்றோ, நிலைத்திருக்கும் மெய்ப்பொருள் என்றோ பொருள்படுத்துகிறோம். லீலை என்று சொல்லுகிறவிடத்துச் சதா நிலைமாறி அமைந்து வருகிற பிரபஞ்சம் என்னும் பகுதியைக் குறிப்பிடுகிறோம். நித்தியம், லீலை ஆகிய இரண்டு கூறுகளையும் பரப்பிரம்மத்தோடு இணைத்து வைத்து நிறைநிலையென்னும் ஒரு பொருளாகவே நான் ஏற்றுக் கொள்ளுகிறேன். பிரபஞ்சத்தை வெறும் மாயை என்று நான் ஒதுக்கித் தள்ளுவதில்லை. அப்படி ஒதுக்கி வைத்தால் நிறைநிலை எனக்குக் குறைநிலையாக அது குன்றிப்போம்."

மகிமசரன்: "ஐயனே தாங்கள் மெய்ப்பொருள் ஆராய்ச்சியை நன்கு ஒருமைப்படுத்துகிறீர்கள். இகம், பரம் என இயம்பப் பெறுபவைகள் நிர்க்குணப்பிரம்மம், சகுணப்பிரம்மம் எனப் பாகுபடுத்தப்படுபவைகள் பரப்பிரம்மம், மாயப் பிரபஞ்சம் எனப்பிரித்து வைக்கப்படுபவைகள் ஆகிய யாவும் தங்களுடைய காட்சியில்இரண்டற்ற ஏகநிலையை யெய்துகின்றன."

பரமஹம்சதேவர்: "பஞ்சேந்திரியங்களுக்குப் புலனாகின்றவைகளை வெறும் பொய்க்காட்சி என ஞானிகள் ஒதுக்கித் தள்ளுகிறார்கள். கனவுக்கு எங்ஙனம் மக்கள் மதிப்புத் தருவதில்லையோ அங்ஙனம் மாயப் பிரபஞ்சத்துக்கு ஞானிகள் மதிப்புத் தருவதில்லை. ஆனால் பக்தன் ஒருவனுடைய பாங்கு மற்றொருவிதமானது. ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய அவஸ்தைகள் அனைத்தையும் பகவானுக்கு உரியவைகள் எனப் பக்தன் ஏற்றுக்கொள்ளுகிறான். ஞானி ஒருவனுக்கு மெய்ப்பொருள் சொட்டுச் சொட்டாகத்தான் சுரந்து வருகிறது. (இதைக் கேட்டு எல்லாரும் நகைக்கின்றனர்) பசுக்களுள் சில தங்களுக்குப் போடப்பட்டுள்ள

தீனி வகைகளுள் சிலவற்றைத் தின்னவும், வேறு சிலவற்றை ஒதுக்கித்தள்ளவும் செய்கின்றன. அத்தகைய பசுக்கள் பாலைத் தருகிறபொழுது சொட்டுச் சொட்டாகத்தான் தருகின்றன. சிலவற்றுக்கு எந்தத் தீனியைப் போட்டாலும் அவைகள் நொறுக்கித் தள்ளுகின்றன. அத்தகைய பசுக்கள் பாலையும் குடம் குடமாகத் தருகின்றன. பக்தனொருவன் பராபக்தனுகின்றபொழுது அவனுக்கு நிர்க்குணபிரம்மம், சகுணபிரம்மம் ஆகிய பிரம்மத்திற்குரிய யாவும் பராபரமாகப் பொருள்படுகின்றன. அத்தகைய பக்தன் எத்தகைய மனநிலையைப் படைத்திருந்தாலும் பரவஸ்து ஒன்றையே அவன் யாண்டும் காண்கிருன். பரவஸ்துவுக்குப் புறம்பாக அவனுடைய காட்சியில் வேறு பொருள் ஏதுமில்லை. அத்தகைய பக்தன் பாலை ஏராளமாகச் சுரந்து தள்ளுகிற பசுவுக்கு நிகராகிருன்."

(எல்லாரும் சிரிக்கிருர்கள்.)

மகிமசரண்: "ஆனல் போடப்பட்டுள்ள தீனிகள் யாவையும் நொறுக்கித் தள்ளுகிற பசுவானது தருகிற பாலில் தீஞ்சுவை கொஞ்சம் குறைந்துபட்டுப் போகிறது." (இதைக்கேட்டு எல்லாரும் நகைக்கிருர்கள்.)

பரமஹம்சதேவர்: (புன்னகை பூத்தவராக) "தாம் பகர்வதில் பொருள் இருக்கிறது என்பதற்கு ஐயமுமில்லை. ஆதலால் ஏராளமாகக் கரந்து தள்ளுகிற பசுவின் பாலைக் காய்ச்சுவது அவசியமாகிறது. அத்தகைய பாலைக் காய்ச்சிச் சிறிது சுண்டவைத்தால் அதில் நறுமணமும் தீஞ்சுவையும் தாமாக வந்து அமைகின்றன. ஈண்டு பக்திப் பெருக்கு என்னும் பாலைச் சுண்டவைத்து சுவை உடையதாகக் காய்ச்சுவதற்கு ஏற்ற தீயாய் இருப்பது ஞானுக்னியாம். (இதைக்கேட்டு எல்லாரும் நகைக்கின்றனர்) (மகிமசரணரைப் பார்த்து) ஓம் என்னும் பிரணவத்தை உன்போன்றவர்கள் அகர, உகர, மகரமாகப் பொருள்படுத்துகின்றீர்கள்."

மகிமசரண்: "அகர, உகர, மகரம் என்ற மூன்று எழுத்துக்கள் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய முத்தொழிலைக் குறிக்கின்றன."

பரமஹம்சதேவர்: "ஆனல் இந்த ஓசைக்கு வேறு ஓர் உதாரணத்தை நான் எடுத்து ஓதுகிறேன். சேகண்டி ஒன்றை மரச் சுத்தியால் தட்டினல் அது 'டொம்' என்னும் சத்தத்தை உண்டுபண்ணுகிறது. ட—ம்—பொ. இந்தப் பாங்கில் ஓசை உருவெடுத்து மூன்று வடிவம் ஒன்றுபடுகிறபொழுது லீலையானது நித்தியத்தில் ஒடுங்குவதைக் குறிக்கிறது. மணியோசை வடிவமெடுத்துத் துவங்குகிறது. பிறகு வடிவமற்ற ஓசையாக அது பரிணமிக்கிறது. வடிவம் உடைய ஓசை லீலை எனப்படுகிறது. அதற்குத் துவக்கமும் முடிவும் உண்டு. மற்று வடிவமற்ற ஓசையோ நித்தியமானது. துவக்கத்தையும் ஒடுக்கத்தையும் காணுதது அது ஸ்தூலமாக இருப்பது, சூட்சுமத்தில் ஒடுங்குகிறது. காரணமாயிருப்பது மகா காரணத்தில் ஒடுங்குகிறது. ஜாக்ரதாவஸ்தை, சொப்பனுவஸ்தை, சுஷுப்தி அவஸ்தை ஆகிய மூன்று அவஸ்தைகளும் துரியத்தில் ஒடுங்குகின்றன. சேகண்டி ஒன்றை மரச்சுத்தியால் அடிக்கிறோம். அந்நிகழ்ச்சியைக் கடலினுள்ளே அதிகம் எடையுள்ள பொருள் ஒன்றைப் போடுவதோடு ஒப்பிடலாம். அப்படிப் பொருளைப் போட்டால் கடலினுள் அலைகள் வடிவெடுக்கின்றன. அலைகளை லீலையோடு ஒப்பிடலாம். கடலைப் பரம்பொருளோடும், அலைகளை ஜகத், ஜீவர்களோடும் ஒப்பிடலாம். லீலையாக இருப்பவைகளுக்குத் தோற்றம், இருப்பு, ஒடுக்கம் உண்டு. மற்று நித்தியமாயிருப்பது யாண்டும் இருந்தபடியிருக்கிறது.

காரண சரீரம், சூட்சும சரீரம், ஸ்தூல சரீரம் ஆகிய மூன்றுவித சரீரங்களும் மகா காரணத்தினின்று உருவெடுக்கின்றன. அயர்ந்த உறக்கம், கனவு, நனவு ஆகிய அவஸ்தைகள் துரியத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன. மூன்று அவஸ்தைகள் துரியத்தினின்று உருவெடுத்து வந்து மீண்டும் துரியத்திலேயே ஒடுங்குகின்றன. அங்ஙனம் மகாகாரணமாய் இருக்கின்ற பரத்தினிடத்திருந்து மூன்றுவித சரீரங்களும் மீண்டும் பரத்திலேயே ஒடுங்குகின்றன. வஸ்துவானது இகம் பரம் ஆகிய இரண்டு நிலைகளில் உளது. பிரபஞ்சமாக இருப்பது இகம். பிரபஞ்சத்தைத் தாண்டியிருப்பது பரம். ஜீவாத்மன் பரத்தினின்று கீழிறங்கி இகத்துக்கு வருகின்ருன். பிறகு மீண்டும் இகத்தினின்று பரத்தைச் சென்றடைகின்ருன். இதற்காகத்தான் 'டம்' என்று அடிக்கின்ற சேகண்டி ஓசையை நான் சான்ருக எடுத்துக்கொள்கின்றேன்.

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

382. பக்தர் சித்தர் வாழி
பரிபக்குவர்கள் வாழி
செங்கோல் வைத்தவர்கள் வாழி
குரு வாழி பராபரமே.

உயிர்களனைத்தும் படிப்படியாக மேல்நிலை எய்திவருகின்றன. இது இயற்கையின் திட்டம். இந்தத் திட்டத்துக்குப் பரிணமவாதம் என்று பெயர். சிற்றுயிர்கள் பரிணமித்துப் பேருயிர்கள் ஆய்வருகின்றன. அவ்வுயிர்களுள் உச்சநிலையடைந்திருப்பவன் மனிதன். சரீரம் தாங்கியிருப்பவைகளுள் மனிதனுக்கு நிகரான உயிரை இயற்கையில் எங்குமே காணமுடியாது. மக்களுள் பரிபக்குவத்தில் பலதரப்பட்டவர்கள் இருக்கிறார்கள். கல் நிலையில் துவக்கி நிறைஞானம் எய்தப்பெற்ற பேரறிஞன் ஈறாக எல்லாப் படித்தரங்களிலும் இருந்து வருகிற மானுடர்களைக் காணலாம். மானுட நிலையை யெட்டியான பிறகு மனபரிபாகமடைவது வாழ்க்கையின் குறிக்கோள் ஆகிறது. சித்தத்தைச் சர்வகாலமும் சிவன்பால் வைத்திருப்பவர்கள் பக்தர்கள் எனப் பகரப்படுகின்றனர். பேரன்பே வடிவெடுத்தவர்களாக அன்னவர்கள் விளங்குகின்றனர். பக்தியைக்கொண்டு அவர்கள் பரம்பொருளைத் தங்களுக்குச் சொந்தமாக்குகின்றனர். மேல்நிலை எய்தியுள்ள மற்றொரு கூட்டத்தார் இருக்கின்றனர். அவர்கள் சித்தர்கள் என இயம்பப் பெறுகின்றனர். சித்தர்களில் பெரும்பான்மையோர் அசாதாரணமான சக்திகள் வாய்க்கப் பெற்றவர்களாகிறார்கள். அன்னவர்கள் அடைந்துள்ள அசாதாரணமான பண்பாட்டுக்குச் சித்தி என்று பெயர். இயற்கையில் காணமுடியாத சில அதிசயச் செயல்களைச் சித்தர்களிடத்துக் காணலாம். நீர்மேல் நடப்பது, நெருப்பின் மீது அமர்ந்திருப்பது, மண்ணினுள் புதைந்திருப்பது, கட்புலனாகா வண்ணம் ஸ்தூல உடலைக் காட்சியினின்று மறைத்து வைப்பது நெடுந்தூரத்திற்கப்பால் நிகழ்கிற நிகழ்ச்சிகளை இருந்த இடத்திலிருந்தே அறிந்து கொள்ளுதல்—இவை போன்ற அசாதாரணச் செயல்கள் வாய்க்கப் பெற்றவர்கள் சித்தர்கள் என்று அழைக்கப் பெறுகின்றனர். இத்தகைய சித்திகளுக்கு அவர்கள் அடிமைப்பட்டு விடுவார்கள்; ஆனால் அதற்குமேல் முன்னேற்றம் அவர்களுக்கு வாய்ப்பதில்லை. சித்திகள் பலவற்றைப் பெற்றிருந்தும் அவைகளைப் பயன்படுத்தாதிருப்பவர்களும், அவைகளில் மயக்குறாதிருப்பவர்களும் பாராட்டத்தக்க பெருமக்களாகின்றனர். அத்தகைய சித்தர்களும் பரிபூர்ணத்தை எட்டியவர்களாம்.

பரிபக்குவர்கள் எனப்படுபவர்கள் மக்கள் இனத்தில் இருக்கின்றனர். உடலமைப்பில் எத்தகைய குறைபாடுமில்லை. கட்டழகும், திட்பமும், ஆரோக்யமும், அடக்கமும் அன்னவர்களின் மேனியின்பால் மிளிர்கின்றன. மேனியைவிடச் சூட்சுமமாயிருப்பது மொழி. இனிய கம்பீரமான குரலிலே சொற்களைத் தெளிவுறப் பகர்வது அவர்களுக்குச் சாத்தியமாகிறது. கவர்ச்சிகரமான இன்னிசையைக் கிளப்புவதும் அவர்களுக்குச் சாத்தியம். பேசும் திறமையையும், பாடும் திறமையையும் பரம்பொருள் வழிபாட்டுக்கென்றே அவர்கள் பயன்படுத்திக்கொள்ளுகின்றனர். பொருந்தாத புன்மொழிகள் அப்பெருமக்கள் வாயினின்று வாரா. பேச வேண்டியதை அளந்தெடுத்தே அன்னவர் பேசுகின்றனர். மொழியைவிட நுண்ணியது மனம். மனத்துக்கண் மாசு சிறிதேனும் இல்லாதிருப்பவர் மேன்மக்கள். முற்றிலும் பரிபக்குவமடைந்துள்ள மனது பரமாத்ம சொரூபத்தை உள்ளபடி பிரதிபிம்பிக்கிறது. அந்தக்கரணத்தின் மற்றொரு பகுதியாகிய அறிவு அல்லது புத்தி முற்றிலும் தெளிந்த நிலையிலிருக்கிறது. தத்துவத்தை உள்ளபடி அறிந்துகொள்ளும் திறமை அந்தத் தூய அந்தக்கரணத்திற்குச் சாத்தியமாகிறது. முற்றிலும் தெளிவாயுள்ள அந்தக்கரணம் அகம் புறம் ஆகிய எங்கும் பரவஸ்துவையே யதார்த்த நிலையில் தரிசிக்கிறது. இங்ஙனம் மேனி, மொழி, மனம் ஆகிய திரிகரணங்கள் முற்றிலும் பக்குவமடைந்திருப்பவர்கள் பரிபூர்ணத்தை எட்டியவர்கள் ஆகிறார்கள். மானுடவடிவெடுத்து நடமாடும்தேவதைகளாக இலங்குபவர்கள் என்று அன்னவர்களைப்பற்றிமொழியலாம்.

மக்களுள் நாடாளும் மகிமை வாய்க்கப் பெற்றிருக்கிறவர்களை மகாவிஷ்ணுவின் அம்சம் எனப் பொருள்படுத்துவது ஐதிகம். ஈசுவர மகிமைகளை இயம்ப வருகிற கிருஷ்ண பர மாத்மா நரர்களுள் நர அதிபனுகி இருப்பது தெய்வத்தின் மகிமை என்று தெரிவிக்கிறுர். மக்கள் வடிவெடுத்திருக்கிற எல்லாரும் ஆட்சிக் குத் தகுதியுடையவர்கள் ஆகமாட்டார்கள். தெய்வசம்பத் வாய்க்கப்பெற்றிருப்பவர்களே சமுதாயத்தை முறையாக ஆளவல்லவர்கள் ஆகின்றனர். ஆதலால் செங்கோல் தாங்கி யிருக்கும் சீரியர்களைப் பரிபக்குவமடைந்துள்ள பெருமக்களாகப் போற்றுவது முறை.

குரு என்னும் சொல் மூத்தவன் எனப் பொருள்படுகிறது. வயதில் மூத்தவன், அனு பவத்தில் மூத்தவன், அறிவில் மூத்தவன், பண் பாட்டில் மூத்தவன், அருளுக்கு இலக்காவதில் மூத்தவன், பூரணத்தை எட்டுவதில் மூத்தவன்—ஆகிய இவர்கள் எல்லாரும் குரு ஸ்தானத்தைப் பெறத் தகுதி வாய்ந்தவர்களாம். ஜீவகோடி களனைத்துக்கும் குருவாகத் தக்ஷிணுமூர்த்தி இலங்குகின்றுர். பேச்சற்றவராயிருந்து பரிபூர ணத்தை அவர் தமது சொரூபத்தின் வாயிலாக யாண்டும் விளக்கிக் கொண்டிருக்கிறுர்.

மேன்மையுற விரும்புகின்ற மக்கள் மேலோ ரைப் பின்பற்றுவதே முறையாகும். மேன்மை யைப் போற்றுதற்கேற்ப மனிதனுக்கு மேன்மை வந்து வாய்க்கிறது. மேலோரை வழுத்துதற் கேற்ப மனிதனுக்கு மேன்மை வந்து வாய்க் கிறது. யார் யார் எல்லாம் போற்றுதற்குரிய வர் என்னும் கோட்பாடு இக்கண்ணியில் இலங்குகிறது. போற்றுதற்குரிய பெருமக்கள் எல்லாரையும் போற்றிப் பரிபூரணத்தை எட்டு வோமாக என்பது இக்கண்ணியின் கருத்தாம்.

**383.** கல்லாதேன் ஆனுலும்
கற்றுணர்ந்த மெய்யடியார்
சொல்லாலே நின்னைத்
தொடர்ந்தேன் பராபரமே.

நூலறிவும் பரஞானமும் ஒன்றேடொன்று இணைக்கப்பட்டவைகள் அல்ல. பண்டைக் காலத்து ரிஷிகள் எழுதப்படிக்கத் தெரியாதவர் கள். அக்காலத்தில் நூல்களும் அமையவில்லை. ஆயினும் ரிஷிகள் எல்லாரும் தீர்க்கதரிசிகளா கத் திகழ்ந்தார்கள். இந்திரிய சுக போகங்களை அறவே துறந்தவர்கள், மனதை முற்றிலும் தூய தாக்கியவர்கள் அவர்கள். பரம்பொருள் நாட்டத் தில் தீவிரமாகக் கருத்தைச் செலுத்துகிறவர்கள் யாராயிருந்தாலும் சரி, எக்காலத்தவராயிருந் தாலும் சரி, எந்த நாட்டைச் சேர்ந்தவர்களா யிருந்தாலும் சரி, எந்த இனத்தைச் சேர்ந்த வர்களாயிருந்தாலும் சரி, அன்னவர்கள் பர ஞானத்தைப் பெறுவது திண்ணம் என்பது இக்கண்ணியின் உட்கருத்து.

**384.** சொல்லிறப்பச் சற்குருவாய்த்
தோன்றிச் சுகங்கொடுத்த
நல்லவர்க்கே கொத்தடிமை
நான்காண் பராபரமே.

கொத்தடிமை-யாண்டும் அடிமையாயிருத்தல்.

இயற்கையில் அமைந்துள்ள கோட்பாடு ஒன்று ஞானத்துறைக்கும்பொருந்தியதாகிறது. நன்ருக முதிர்ந்து பழுக்கும் தறுவாயிலிருக்கும் மாங்காய் இரண்டு கூடைகளில் ஒரே நாளில் ஒரு மரத்தினின்று பறித்தெடுத்தல்வேண்டும். அப்படிப் பறித்தெடுத்த மாங்காய்க் கூடை களைத் தனித்தனியாய் இரண்டு அறைகளில் பிரித்து வைத்தல் வேண்டும். அவைகளுள் ஒரு கூடையிலிருக்கும் மாங்காய்களோடு ஏற்கனவே நன்ருகப் பழுத்த மாம்பழம் ஒன்றை வைத்தல் வேண்டும். இவ்விரண்டு கூடைகளில் உள்ள மாங்காய்களுள் ஏற்கனவே பழுத்த பழத்தோடு இருக்கும் மாங்காய்கள் விரைவில் பழுக்க ஆரம்பிக்கும்; நல்லார் இணக்கத்துக்கு இது சான்ருகும். அருளாளர்களிடமிருந்து அரு ளைப் பெறுதற்கு இயற்கையில் இது நல்ல சான்ருகின்றது. ஆத்ம சாதகனுடைய மன பரிபாகத்திற்கேற்பச் சான்ருேர்களிணக் கத்தால் பரஞான பரிபாகம் விரைவில் அமைகிறது. சான்ருேர்களுடன் கூடி வாழ்ந் திருப்பவர்கள் கேள்விஞானம் சிறிதும் இல்லா திருந்தாலும் அவர்கள் பரஞானத்துக்குத் தகுதி உடையவர்கள் ஆகிறுர்கள். தக்ஷிணுமூர்த்தி யின் முன்னிலையில் முற்றிலும் பரிபாகமடைந் திருந்த நால்வர் வந்து அமர்ந்தனர். பேச்சுக்கு இடமில்லாமலேயே மௌன நிலையில் அந்நால் வரும் பரிபூரணத்தை அடையப்பெற்றனர். சத் சங்கத்தின் மகிமையால் ஆத்ம சாதகனொருவ னுக்கு ஞானம் சாத்தியமாகும் என்னும் கோட் பாடு இக்கண்ணியில் அடங்கியிருக்கிறது.

# அருள் நெறி

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் சிஷ்யரான சுவாமி அபேதானந்தரின் போதனை)

உனக்குக் கடவுள் காட்சி கிட்டுமாயின் கடவுள் அனுக்கிரகம் உனக்கு இருக்கிறது என்பதை அது காட்டித் தருகிறது. கடவுள் காட்சி பெறுவது மனதில் நல்ல சம்ஸ்காரங்கள் உருவாகி வருகின்றன என்பதற்கு அறிகுறியாகும். ஜபத்தின்பொழுதும் கனவு காண்கின்ற நிலையிலும் கடவுள் காட்சிகள் உண்டாகலாம். மனம் பண்பட்டு வரவரத் தெய்விகக் காட்சிகள் வந்து வாய்க்கும். அவைகளுக்கு விளக்கம் காண்பதில் நீ மூளையைக் குழப்பிக்கொள்ள வேண்டியதில்லை. மனத்தூய்மைக்கு அவைகள் அறிகுறிகளாயிருக்கின்றன என்பதை மட்டும் ஏற்றுக்கொள். மனம் திருப்தியுற்றவனாக இரு. அக்காட்சிகளில் நீ அதிகக் கவனம் செலுத்த வேண்டியதில்லை. தெய்வீகக் காட்சி வந்து அமைந்ததினால் ஆத்மிகத்துறையில் எல்லாம் அடைந்துவிட்டதாக நீ எண்ணிவிடாதே. ஆத்மிகத்துறையில் எவ்வளவோ இன்னும் முன்னேற வேண்டியவனாக இருக்கின்றாய். நீ செய்யும் ஜபத்திலும், தியானத்திலும் ஆழ்ந்த கருத்துச் செலுத்து. மனதில் அமைதி ஏற்பட ஏற்பட விதவிதமான தெய்வீகக் காட்சிகள் ஏற்படலாம். உனக்கு ஏற்படும் தெய்வீகக் காட்சிகளைப் பற்றி மற்றவர்களிடம் சொல்ல வேண்டாம். நீ குழப்பத்தை உண்டுபண்ணிக் கொள்ள வேண்டாம். உன்னை நீ தெய்வத்தின் புதல்வனாகக் கருது. உனக்கு ஏதாவது தேவையென்றால் அதைத் தெய்வத்தினிடமே கேட்டுப் பெற்றுக்கொள்.

அன்னை ஸ்ரீ சாரதாதேவியார் அருள் அன்னையாக விளங்குகிறார். சாரதாதேவியாருடைய நாமமே ஜபத்துக்குரியதாகிறது. அன்னை ஸ்ரீ சாரதாதேவியாரின் மஹிமையை ஸ்ரீ ராமகிருஷ்ணர் முற்றும் அறிந்திருந்தார். அன்னையாரைப்பற்றி மற்றவர்களுக்கு அதிகம் தெரியாது. அன்னையிடம் நீ பக்தி செலுத்துவாயானால் அன்னையே தம் மகிமையை உனக்கு விளக்கிக் காட்டுவார். ராம்பிரசாதருடைய பாடல் ஒன்று வருமாறு: "அன்னை காளிகா தேவியே, உம்மை யார்தான் முற்றும் அறிந்திருக்கிறார்? மதங்கள் யாவும் உம் மகிமையை அறிந்துகொள்ள முயல்கின்றன. ஆனால் அம் மதங்கள் முற்றும் உம்மை அறிந்துகொள்ள முடிவதில்லை. உம் மகிமையை அறிகிறபொழுது சிவபெருமானே பித்துப்பிடித்தவர் போன்று ஆகிவிடுகிறார். விக்கிரக வழிபாடுசெய்யும் சாதகர்களுக்குத் தாயே, நீ உருவத்தோடு காட்சி கொடுக்கின்றாய். உம்மை வடிவமற்றவளாகக் கருதி வணங்கும் பக்தர்களுக்கு நீ அங்ஙனமே அருள்புரிகின்றாய். பிரம்மம் ஒளிவடிவமானவர் என்று சிலர் கருதுகின்றனர். தாயே, நீ அந்த ஒளி சொரூபமாக இருக்கின்றாய். யார் எங்ஙனம் கருதுகின்றார்களோ அத்தகைய கருத்துமயமாகப் பிரம்மசக்தியாகிய நீ இருக்கிறாய். நான்காவது நிலையாகிய துரியநிலையில் தாயே, உம் மகிமை அளப்பதற்கு அரியது ஆகிறது. அதை விளக்கவும்முடியாது. மூன்று அவஸ்தைகளுக்கும் அப்பாலுள்ள துரிய அவஸ்தைக்குச் செல்பவர்கள் தாயே, உம்மகிமையை அறிகின்றார்கள். உலகநிலையில் இருப்பவர்களுக்கு உம்மகிமை எங்ஙனம் விளங்கும்?"

அன்னை பராசக்தியை அறிந்துகொள்கின்றவர்கள் அன்னை சாரதாதேவியாரையும் அறிந்துகொள்ளமுடியும். உன் அறிவின் திறனைக்கொண்டு ஸ்ரீ சாரதாதேவியாரை அறிந்து கொள்ள முடியாது. அக்னியையும் உஷ்ணத்தையும் பிரிக்கமுடியாது. அங்ஙனம் பிரம்மத்தையும் பிரம்ம சக்தியாகிய மாயையையும் பிரிக்க முடியாது. ஸ்ரீ ராமகிருஷ்ணரும், சாரதா தேவியாரும் பிரம்மமும் பிரம்மசக்தியும் போன்றவர்கள். பரபிரம்மத்தின் சக்தியே மாயையாகும். வித்தை அவித்தை என்ற இரண்டு வடிவங்களில் அம்மாயைத் தன்னைத் தோற்றுவித்துக் கொண்டிருக்கிறது. வித்தை தூய மனதாக வடிவெடுக்கிறது. அவித்தை அசுத்த மனதாகும். அவித்தைக்கு ஆவரணம், விக்ஷேபம் என்ற இரண்டு சக்திகள் உண்டு. ஆவரணம் என்றால் மறைப்பு சக்தி. பிரம்மத்தை மறைத்து வைத்திருப்பது ஆவரணசக்தியாகும். மனத்தைச் சலனத்துக்குள்ளாக்குவது விக்ஷேப சக்தியாகும். அவித்தை வடிவுடைய மனது சதா சலனமடைந்து கொண்டிருக்கும். அன்னை

பராசக்தி மாயை வடிவத்திலிருந்து மூவுலகத்தையும் மறைப்புச் சக்தியில் ஆழ்த்தி இருக்கின்றாள். அன்னையின் அருள் இல்லாது அம்மறைப்பை விலக்க முடியாது. அன்னை சாரதா தேவியாரின் அருட்செல்வனாக நீ ஆவாயாக. அப்பொழுது அன்னை அருள்கூர்ந்து உன்னிடமிருந்து மாயாசக்தியை விலக்கி வைக்கின்றாள். அப்பொழுது நீ ஞானக்கண் பெறுகின்றாய். அன்னையிடம் அடைக்கலம் புகுந்து அன்னையை வழிபட்டு வருவாயாக. அன்னையின் அருளால் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய பெருமையும் உனக்கு விளங்கும். அன்னையின் அருள் வேண்டுமென்று அனவரதமும் பிரார்த்தித்து வருவாயாக.

நீ உலகில் எப்படி வாழ்ந்திருக்க வேண்டும் தெரியுமா? நீரில் படகு இருப்பது போன்று நீ உலகில் வாழ்ந்திருக்க வேண்டும். படகுக்குள் நீர் புகுந்தால் படகு நீரில் மூழ்கிப் போய் விடும். அங்ஙனம் உலகப்பற்று உன் உள்ளத்தில் புகுந்துவிட்டால் நீ உலகில் மூழ்கிப்போய் விடுவாய். உலகத்தவர்கள் கருதும் பெண்டு பிள்ளைகளும், உற்றார் உறவினர்களும் பந்த பாசத்தின் விளைவாக ஏற்பட்டவர்களாவார்கள். கணவன், மனைவி, என் குடும்பம், என் குழந்தைகள் என்ற எண்ணங்களை விட்டொழித்துவிடு. அவ்வெண்ணங்கள் அவித்தைக்குக் காரணமாகின்றன. அவர்களை எல்லாம் தெய்வத்தின் குழந்தைகளாகக் கருது. உன்னையும் அத்தெய்வீகக் குடும்பத்தில் ஒருவனாக எண்ணிக்கொள். உலக உறவில் உனக்கு ஒரு நலனும் விளையாது. உன்மகன் உன்னைக் காப்பாற்றுவான் என்று எண்ணாதே. உன்னை நீதான் காப்பாற்றிக் கொள்ளவேண்டும். நீ செய்த வினையின் விளைவை நீதான் அனுபவித்தாகவேண்டும். உனக்காக இன்னொருவர் அனுபவிக்க முடியாது. நல்லதைச் செய்ய நீ கடமைப்பட்டிருக்கிறாய். உலகத்தை ஆளும் தெய்வம்தான் உன்னையும் ஆண்டு வருகிறார். மக்கள் மாயாசக்திக்கு வசப்பட்டவர்களாகிறார்கள். மாயாசக்திக்கு வசப்பட்ட அவர்கள் கணவன், மனைவி என்ற உறவுகளை உண்டாக்கிக் கொண்டு இன்பதுன்பங்களை அனுபவித்து வருகிறார்கள். இவ்வுறவுகள் நிலைத்தவைகள் அல்ல. மாயாசக்தியின் ஆதிக்கத்துக்கு உட்பட்டவர்கள் தங்கள் மனதை உலக நிலையிலிருந்து உயர்த்திக்கொள்ளச் சக்தியற்றவர்களாய் இருக்கிறார்கள். இந்திரிய சுகத்துக்கு ஏதுவான எண்ணங்கள் மனதுக்கு இன்பம் தருமானால், மனம் கீழ்மையில் உழல்வதாகிறது. தெய்விக சம்பந்தமான எண்ணங்கள் மனதுக்கு இன்பம் தருமானால் மனம் உயர் நிலையை நோக்கிச் செல்கிறது.

கடவுள் சிந்தனை செய்து பழகு. கசிந்துருகிப் பிரார்த்தனைசெய். மானுடவடிவத்தில் இருக்கும் இறைவனைக் கணவனாகவும், மனைவியாகவும் மதி மயக்கத்தால் கருதுவது அறிவீனமாகும். அத்தகைய எண்ணம் உன்னை இவ்வுலகத்தில் இருந்து விடுவிக்காது. கடவுள் இவ்வுலகத்துக்கே அதிபதி என்றும், ஒவ்வொரு உயிராகவும் அவர்தாம் வடிவெடுத்திருக்கிறார் என்றும் எண்ணிப் பழகவேண்டும். அத்தகைய எண்ணம் உள்ளத்துக்குச் சாந்தியைத் தரும்.

மன அமைதிக்காக இடம்விட்டு இடம் மாறிப் போகிறவர்கள் இருக்கிறார்கள். மனம் அலைந்து கொண்டிருக்கும்வரையில் நீ எங்குச் சென்றாலும் அமைதியைப் பெறமுடியாது. உன் உள்ளத்தில் அமைதியும் திருப்தியும் ஏற்பட்டால் தான் உனக்கு உண்மையில் அமைதி உண்டாகும். விவேகத்தைக் கொண்டு மனதை அடக்கிப் பழகு. புற விஷயங்கள் உன் உள்ளத்தில் புக நீ அனுமதிக்கக் கூடாது. மனம் புறவுலகால் கவரப்படாமல் தன்னில் தானாக இருந்து பழகவேண்டும். அப்படி மனதைப் பழக்குவதுதான் சாதனை என்பதை அறிந்துகொள். உலகிலிருந்து உனக்கு எது வந்து வாய்த்தாலும், உன் மனம் சாந்தி அடைந்துவிடாது. பாதகமான சூழ்நிலையையும் சாதகமான சூழ்நிலையாக மாற்றத் தெரிந்து கொள். உன் மனதைத் திருத்தி அமைத்துவிட்டால் எல்லாச் சூழ்நிலைகளும் உனக்குச் சாதகமாக அமைந்துவிடும். மனம்தான் எல்லாவற்றிற்கும் காரணம் ஆகும். உன் மனதைக் காதோடு பொருத்தாவிட்டால் புறவுலகில் உள்ள ஓசை உனக்கு உரியது ஆகாது. அங்ஙனம் எல்லாப் பொறிகளிடமிருந்தும் உன் மனதை விலக்கி எடுத்துக்கொள்வாயானால், பொறிகள் மூலம் வரும் விஷயங்கள் உன் மனதில் புகா. மனத்தைத் தெய்வத்திடம் திருப்பு. அவர்தாம் உனக்கு உண்மையில் உதவுபவர் ஆவார்.

# அம்பிகையின் மகிமை

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1970ஆம் ஆண்டு திருப்பராய்த்துறை தபோவனம் சக்திபூஜை அந்தர் யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

அம்பிகைக்கு அமைந்துள்ள ஆயிரம் திரு நாமங்கள் அம்பிகையினுடைய மகிமையை விளக்குகின்றன. வியக்தா அவ்யக்தா சொரு பிணி என்பது ஆயிரம் நாமங்களில் ஒன்ருகும். தோன்ரு நிலையிலுள்ள அம்பிகை அவ்யக்தம் என்றழைக்கப்படுகிருள்; தோற்றத்திற்கு வந்துள்ள அம்பிகை வியக்தம் என்றழைக்கப்படுகிருள். அம்பிகை தோற்றத்தில் உள்ள நிலையிலும் தோன்ரு நிலையிலும் இருக்கின்ருள். கடவுள் என்கின்ற சொல் இந்திரியங்களைக் கடந்தும், இந்திரியங்களுக்குப் புலனுகின்ற உலகில் ஊடுருவியும் இருக்கும் பொருள் என்பதைக் குறிக்கிறது. உலகத்தினுள் ஊடுருவிப் பாய்ந்திருப்பது வியக்தம். இந்திரியங்களுக்கு எட்டாமல் இருப்பது அவ்யக்தம். இந்திரியங்களுக்கு எட்டாத நிலையில் இருப்பதைக் கிரகிப்பது கஷ்டம். இந்திரியங்களுக்கு எட்டுகின்ற நிலையில் இருப்பதைக் கிரகிப்பது எளிது. அம்பிகையினுடைய ஸ்தூல தோற்றம் பஞ்சேந்திரியங்களுக்கு எட்டும் பிரபஞ்சம் ஆகும். பிரபஞ்சம் வேறு அம்பிகை வேறு அல்ல. பிரபஞ்சத்தை அம்பிகைசொருபமாகப் பொருள்படுத்துவதற்கு ஏற்ப நாம் ஆத்மசாதனத்தில் முன்னேறுகின்ருேம். சூரிய வெளிச்சம் வெட்டவெளியில் கட்புலனுவது இல்லை. சூரிய கிரணத்தை ஒரு முப்பட்டை கண்ணுடி மூலம் செலுத்தினுல் அது ஏழு நிறமாகச் சிதறடைகிறது. அப்பொழுது அதுகட்புலனுகின்றது. அங்ஙனம் கட்புலனுகின்ற வெளிச்சம் கட்புலனுகாத வெளிச்சத்துக்குப் புறம்பானதன்று. அவ்வேழு நிறங்களையும் ஒரு வட்டமான அட்டையில் செலுத்தி, அவ்வட்டையை வேகமாகச் சுழற்று. அப்பொழுது அவ்வேழு நிறங்களும் ஒன்றித்துப் போய் வெள்ளை நிறமாக மாறுவதைக் காண்பாய். பிறகு அவ்வெள்ளை நிறத்தையும் தாண்டிய நிலைக்கு அது போக முடியும். உறைபனி வெண்மையாக இருக்கின்றது. அவ்வுறைபனி உருகி வரவர நிறமற்றுப் போகிறது. வெள்ளையாக இருக்கின்ற சர்க்கரையைத் தண்ணிரில் போட்டுக் கலக்கு. அப்பொழுது அது நிறமில்லாது போய்விடும். நீராவி இயந்திரத்தில் இருந்து வரும் நீராவி வெண்மையாக இருக்கிறது. பிறகு அது நிறமில்லாததாக மாறிப் போகிறது. நிறமில்லாத அந்நிலையைத்தான் அவ்யக்தம் என்கிருேம். நிறமாக வடிவெடுக்கும் நிலையை வியக்தம் என்கின்ருேம். இயற்கையில் இதற்கு நாம் சான்றுகளைக் காணலாம்.

பொருள் தோற்றத்திற்கு வராமையினுல் அப்பொருளே இல்லை என்று சொல்லிவிட முடியாது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் இவ்வுண்மையை ஒரு உபமானத்தின் மூலம் விளக்குகிருர். அவர் பகர்வதாவது: "மானுடா! நீ பகலில் வானத்தில் நட்சத்திரங்களைக் காண்பதில்லை. ஆனுல் பகல் நேரத்தில் வானத்தில் நட்சத்திரங்கள் இல்லை என்று சொல்ல முடியுமா? அஞ்ஞானத்தால் நீ கடவுளைக் காணமுடிவதில்லை. ஆகையால் கடவுள் இல்லை என்று நீ சொல்லிவிட முடியுமா?" பொருள் தோற்றத்திற்கு வரும்பொழுது புலப்படுகிறது. தோற்றத்திற்கு வராத நிலையிலும் பொருள் இருக்கிறது. ஆனுல் புலப்படுவதில்லை. கண்ணுக்குப் புலனுவதைச் சான்ருக எடுத்து ஆராய்ந்தோம். இனி காதுக்குப் புலனுகின்ற ஓசையை எடுத்து ஆராய்வோம். ஓசை உச்சரிக்கப்படுகின்ற நிலையிலும், உச்சரிக்கப்படாத நிலையிலும் இருக்கிறது. ஓசைகளின் தொகையாக இருப்பது ஓம் என்ற பிரணவம் ஆகும். உச்சரிக்கப்படாத நிலையில் அது அமாத்திரப்பிரணவம் எனப்படுகிறது. ஓம் என்பது உச்சரிக்கப்படுகின்ற நிலையில் மாத்திரப் பிரணவம் எனப்படுகிறது. ஓசையைப் பிரித்தெடுக்கும் பொழுது அது சப்த ஸ்வரங்கள் அல்லது ஏழு ஓசைகளாக மாறுகிறது. சப்த ஸ்வரங்களிலிருந்து இசை உண்டாகிறது. தோன்ரு நிலையில் ஓசை காதுக்குப் புலனுவதில்லை. தோற்றத்திற்கு வருகின்றபொழுது கண்ணுக்கு விதவிதமான நிறங்கள் புலனுவது போன்று காதுக்குப் பலப்பல ஓசைகளாகப் புலனுகின்றது. சுவை ஏழாகப் பரிணமிக்கின்றது.பொதுவாகச் சுவையை அறுசுவை என்கின்ருேம். அறு

சுவையோடு நீரின் சுவையையும் சேர்த்துக் கணக்கெடுத்துப்பார்த்தால் ஏழாகப் பரிண மிக்கின்றது. அப்படிச் சுவை ஏழாகப் பரிண மிக்குமிடத்து அது வியக்தம் எனப்படுகிறது. சுவையை எல்லாம் தாண்டிய நிலையில் அது அவ்யக்த நிலையில் இருக்கிறது. மோப்பத்தை நறுமணம் துர்நாற்றம் என இரண்டாகப் பிரிக்கின்றோம். ஒருவருக்கு நறுமணமாக இருப்பது மற்றவருக்குப் பிடிப்பதில்லை. ஒருவருக்குத் துர்நாற்றமாக இருப்பது மற்றவருக்குப் பிடித்தமாக இருக்கிறது. நாற்றத்திலும் ஏழு படித்தரங்கள் இருப்பதை ஆராய்ந்தால் தெரியும். நாய்க்கு மோப்ப சக்தி அதிகம். நாய்க்கு இருக்கின்ற மோப்பசக்தி மனிதனுக்கு இல்லை. மோப்ப சக்தியைப் பயன்படுத்தியே நாய் மனிதனை அடையாளம் அறிந்துகொள்கின்றது. ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு தனி வாசனை உண்டு. அதைக் கண்டுபிடிக்கின்ற சக்தி மானுட மூக்குக்கு இல்லை. நாய் அதை அறிந்து கொண்டுவிடுகின்றது. ஹெலன் கெல்லர் என்ற மாதுவுக்குக் கண் தெரியாது. ஆனல் அவர் ஒருமுறை ஒருவரைச் சந்தித்துவிட்டால் மறுமுறை அவர் வரும்பொழுது மோப்பத்தால் அவரை அடையாளம் அறிந்துகொள்வார். அத்தகைய சக்தி நமக்கு இல்லாவிட்டாலும் அந்த அம்மைக்கு இருந்தது. தொட்டு உணர்தலில் சப்த தாதுக்கள் அல்லது சப்த நாடிகள் இருப்பது நாடி பார்க்கின்றவர்களுக்கு விளங்குகின்றது. ஐந்து இந்திரியங்களுக்குப் புலனுவது வியக்தம் எனப்படுகிறது.

'சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தின் வகைதெரிவான் கட்டே உலகு' என்பது குறள். ஐந்து இந்திரியங்களுக்குப் புலனுகும் உலகம் சக்தியின் சொரூபம். ஐந்து இந்திரியங்களுக்கு எட்டாத நிலையில் இருப்பதும் சக்தியே. ஐந்து இந்திரியங்களுக்கு எட்டுகின்ற பகுதியினிடத்துத் தெய்விக இணக்கம் வைப்பதற்கு நாம் சக்தி பூஜை கொண்டாடுகின்றோம்.

தோற்றமாக வந்திருக்கின்ற உலகத்தில் பருவங்கள் மாறி மாறி வருகின்றன. சக்திபூஜை கொண்டாடும் இப்பருவத்தில் ஒருசிறப்பு இருக்கிறது. கிட்டத்தட்ட நாடுமுழுவதிலும் இப்பருவத்தில் சக்தியின் விபூதி பூமியின்கண் ஸ்பஷ்டமாகவெளியாகிறது. மழை பெய்து ஓய்ந்துள்ள காலம் இப்பருவம். இயற்கை எங்கும் எழில் நிறைந்ததாக இருக்கிறது. புராணக் கதை ஒன்று உண்டு. கைலாசத்தில் பரமசிவனேடு இருக்கும் சக்தி பூலோகத்துக்கு இப்பருவத்தில் விஜயம் செய்கின்றாள். இங்குப் பத்து நாட்கள் தன்னுடைய குழந்தைகளைப் பார்வையிடுகின்றாள். சக்தியின் வருகையால் இயற்கை எங்கும் பசுமை நிறைந்து அழகு நிறைந்ததாகத் தென்படுகிறது. அந்தச் சக்தியோடு எத்தகைய இணக்கம் வைப்பது என்பது சக்தி பூஜையின் வாயிலாக நாம் அறிந்துகொள்ளவேண்டும். அம்பிகைக்கு அமைந்துள்ள நாமங்களுள் ஸ்ரீ மாதா என்பதும் ஒன்று. அம்பிகை ஜகத் ஜனனி ஆகின்றாள். ஜகத்திலுள்ள உயிர்கள் அனைத்தையும் அவள் தோற்றுவித்திருக்கின்றாள். பிரபஞ்சத்தில் உள்ள இணக்கங்களுக்கெல்லாம் சிறந்ததாக இருப்பது தாய்க்கும் சேய்க்கும் உள்ள இணக்கம் ஆகும். மனிதன் மட்டுமல்லாது உயிர்கள் அனைத்திடத்தும் தாய் சேய் இணக்கம் சிறந்ததாக இருக்கின்றது. பறவைகளானாலும், விலங்குகளானாலும் தாயினிடத்து அலாதியான இணக்கம் வைக்கின்றன. அவ்விணக்கத்தைஇன்னும் பன்மடங்குமேலான இணக்கமாகத் திருத்தியமைப்பது மனிதனுக்குச் சாத்தியம். ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஜீவிதமே அதற்குச் சிறந்த சான்றாகிறது. இந்தியாவில் தோன்றிய சமயாசாரியர்கள் யாவரும் சக்தி உபாசனையைச் சிறப்பாகச் செய்திருக்கிறார்கள். சக்தி உபாசனையில்தான் கடவுள் வழிபாடு துவங்குகின்றது. கட்புலனாகின்ற பொருள்களோடு இணக்கம் வைக்கத் தெரிந்துகொண்டால்தான் கட்புலனாகாத பொருளோடு இணக்கம் வைப்பது சரியாக வந்தமையும். நாம் காற்றில்லாது நொடிப்பொழுதும் வாழ்ந்திருக்க முடியாது. ஆனல் நாம் காற்றைக் கண்ணால் பார்க்க முடியாது. சுவாசிப்பதன் மூலம் காற்று இருப்பதை உணருகின்றோம். காற்று வேகமாக அடிக்கும் பொழுது ஓசையைக் கேட்கலாம். காற்றை நாம் எடுத்துக்கொண்டு போவதில்லை. அது எங்கும் வியாபகமாக இருக்கிறது. ஒரு இந்திரியத்துக்கு எட்டாததனால் காற்று இல்லை என்று சொல்ல முடியாது. கடவுள் ஐந்து இந்திரியங்களுக்கும் எட்டாதவர். அவர் சக்தி சொரூபமாகத் தம்மை விளக்குமிடத்து அவர்

ஐந்து இந்திரியங்களுக்கும் எட்டுவதாக இருக்கின்றார். பஞ்சேந்திரியங்கள் மூலமாகவும் அவரிடம் மேலான இணக்கம் வைப்பது சக்தி பூஜை ஆகின்றது.

சிசு தாயைச் சார்ந்து இருக்கிறது. தாயைத் தவிர அதற்கு வேறு கதியில்லை. தாய் சிசுவைக் காப்பாற்றுகின்றது. தாயின் பாதுகாப்பு இல்லாவிட்டால் சிசு வளர்ச்சியடைய முடியாது. ஆகையால் தாய்க்கும் சேய்க்கும் உள்ள இணக்கம் யாண்டும் தெய்வீக இணக்கமாக இருக்கிறது. சரீரம் முதிர்ச்சி அடைந்து வரும் பொழுது சேய் தாயைச் சார்ந்திருக்க வேண்டிய அவசியம் இல்லை. குஞ்சு பெரியதானதும் தாய்ப் பறவை தானே குஞ்சை விரட்டிவிடுகின்றது. விலங்கு உலகத்திலும் நாம் இக்காட்சியைப் பார்க்கலாம். மக்கள் உலகில் சில சமுதாயங்களில் வயதான பிறகு பெற்றோர்க்கும் பிள்ளைக்கும் தொடர்பு இல்லாது போய்விடுகிறது. மேனாட்டில்தான் இத்தகைய நிகழ்ச்சி நடக்கிறது. இந்தியப் பண்பு அதிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. பெற்றோர்க்கும் பிள்ளைக்கும் உள்ள இணக்கம் என்றைக்கும் மாறாதது. ராமாவதாரத்தின்மூலம் நம் தேசியப் பண்பு நமக்கு விளக்கப்படுகின்றது. புத்திரோத்தமன் என்று ராமன் பகரப்படுகின்றான். பெற்றோர் காலமான பிறகும் சிரார்த்தம் செய்வதன்மூலம் எண்ணத்தின் வாயிலாக அவர்களோடு தொடர்பு வைக்கின்றோம். அந்த அளவு அது தெய்விக இணக்கமாக விரிவடைகிறது. மக்கள் வழிபாட்டுக்காகப் பிறந்திருக்கின்றனர் என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்துள்ளார். சிவத்தைக் காணமுடியாது. சக்தியின் தோற்றமே காட்சியளிக்கிறது. கட்புலனாகின்ற சக்தியினிடத்துத் தெய்விக இணக்கம் வைத்துப் பழகினால், கட்புலனாகாத சிவத்திடத்தும் இணக்கம் வைப்பது சாத்தியமாகிறது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம் வாழ்க்கையின் மூலம் சக்தியினிடத்து எப்படி இணக்கம் வைக்க வேண்டும் என்பதை நிரூபித்துக்காட்டியுள்ளார். தாய் சேய் இணக்கம் பரஞானம் அடையும்வரை பயனுடையதாக இருக்கின்றது. பரத்தில் லயம் ஆகின்ற பொழுது தாய்தந்தையாக இருக்கின்ற மூல வஸ்துவில் போய் ஒடுங்குகின்றோம். தாயைச் சார்ந்திருந்து பழகுதல் சக்தி உபாசனை ஆகிறது. தாயைச் சார்ந்திருக்கின்ற அளவு பாரமார்த்திகப் பெருவாழ்வில் வளர்ச்சியடைகின்றோம். சக்தி உபாசனை வலுத்து வரவரத் தெய்வீக இணக்கம் உறுதிவாய்ந்த இணக்கமாகின்றது. இணக்கம் உறுதி பெறப் பெறத் தாய் புகட்டும் பாடத்தை உள்ளத்தின் உள்ளேயே சாதகன் உணர வல்லவன் ஆகின்றான். தாய் புகட்டும் அன்பை நூல் மூலமாகப் பெற முடியாது. அன்னை பராசக்தியை நம்பியிருக்கின்றவர்களுக்கு அவள் அனைத்தையும் புகட்டுகின்றாள். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய ஜீவிதம் அதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக வந்தமைகிறது. அன்னை பராசக்தி பிரபஞ்சமாக இருந்து விளையாட்டை நடாத்தி வருகின்றாள். அம்பிகை உயிர்களைப்பக்குவப்படுத்திப்பரஞானத்துக்குத் தகுதியுடையவைகளாக ஆக்கிக்கொண்டிருக்கின்றாள். அம்பிகை உயிர் வகைகளைத் தோற்றுவித்துப் பரிபாலித்து வருகின்ற விளையாட்டை 'கராங்குலி நகோத்பன்ன நாராயண தசாக்ருதி' என்னும் நாமம் விளக்குகிறது. அம்பிகை தன் கரத்திலிருக்கின்ற பத்து நகக்கண்கள் மூலமாகத் தசாவதாரத்தை விளக்கிக் காட்டுகின்றாள். மத்ஸ்யம், கூர்மம், வராகம், நரசிம்மம், வாமனன், பரசுராமன், ராமன், கிருஷ்ணன், புத்தன் ஆகிய ஒன்பது அவதாரங்கள் வெவ்வேறு காலங்களில் நிகழ்ந்தனவாகப் புராணம் கூறுகிறது. பத்தாவது அவதாரமாகிய கல்கி அவதாரம் இனி வரப்போவதாகப் புராணம் கூறுகிறது. அம்பிகை தன்னுடைய சொரூபத்தில் பத்து அவதாரங்களைப் பத்து நகக்கண்களைக்கொண்டு விளக்குகின்றாள். அம்பிகையினுடைய சாந்நித்தியம் என்றைக்கும் இருந்துவருகிறது. அதில் எந்தப் பகுதியை ஆராய்ந்து பார்த்தாலும் நம் அறிவுக்கு எட்டாத அதீத நிலைக்குக் கொண்டு சேர்க்கிறது. பௌதீக விஞ்ஞானிகள் இயற்கையை ஆராய்ச்சி செய்து பல உண்மைகளைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். மேலும் புதியதாக ஓர் உண்மையைக் கண்டுபிடித்தால் அது கண்டறியாத பகுதி இன்னும் இருக்கிறது என்பதைக் காட்டித் தருகிறது. நமக்கு விளங்கிய பகுதி சிறிது என்றும், விளங்காத பகுதி ஏராளம் என்றும்பகர்கின்றார்கள். 'கற்றதுகைம்மண்ணளவு கல்லாதது உலகளவு' என்பது பெரிய கோட்பாடு. அறிந்துகொண்ட பகுதி குறை

வாகவும் அறியாத பகுதி அதிகமாகவும் இருக்கிறது. நாராயணன் தசாவதாரமாக வந்தது அம்பிகையின் நகக்கண்களின் ஒருபகுதியாகும். தசாவதாரங்கள் சர்வகாலமும் இயற்கையில் இருக்கின்றன. அது அம்பிகையினுடைய மகிமை. பத்து அவதாரங்களில் முதலாவது மத்ஸ்ய அவதாரமாகும். நீர் வாழ்வன அனைத்துக்கும் பொதுப் பெயராக மச்ச அவதாரம் இருக்கிறது. மீன்கள் சதா தோன்றிக்கொண்டு இருக்கின்றன. அவ்வியக்தமாக இருக்கின்ற அம்பிகை வியக்தமாகின்றபொழுது பஞ்சபூதங்களாக வடிவெடுக்கின்றாள். ஆதிசக்தியாக இருக்கின்ற மூலப் பிரகிருதியினிடத்திருந்து ஆகாயம் உருவெடுக்கின்றது. ஆகாசத்தின் தன்மாத்திரையாக ஓசை இருக்கின்றது. அவ்வோசையைக்கேட்பதற்குக் காது என்னும் இந்திரியம் அமைந்திருக்கின்றது. ஆகாசத்திலிருந்து வாயு வருகின்றது. அதன் தன்மாத்திரை ஸ்பரிசம் ஆகும். அதை நுகர்வதற்கு மெய் அமைந்திருக்கிறது. வாயுவிலிருந்து அக்கினி வருகிறது. அக்னியின் தன் மாத்திரை ரூபம் அல்லது வடிவம் ஆகும். வடிவத்தைக் காண்பதற்குக் கண் அமைந்திருக்கிறது. அக்னியில் இருந்து நீர் தோற்றத்திற்கு வருகிறது. நீரின் தன்மாத்திரை சுவை ஆகும். சுவையைப் புலப்படுத்த நா அமைந்திருக்கிறது. உயிர் தோற்றத்திற்கு வருவதற்கு நீர் அனுகூலமான சூழ்நிலை ஆகும். அனுகூலமான சூழ்நிலையை உண்டு பண்ணி வைத்துவிட்டால் தோன்றா நிலையில் இருக்கின்ற உயிர் தோற்றத்திற்கு வருகிறது. பாலைவனத்தில் நீர் பெருக்கெடுத்து ஓடும்படி செய்தால் இரண்டு மூன்று ஆண்டுகளுக்குள் அங்குச் செடி கொடிகளும், புழு பூச்சிகளும் தாமாகவே தோன்றிவிடும். பல்லி நீர்குடிக்காது வாழ்ந்திருக்கிறது. ஆனால் காற்றில் ஆவிரூபத்தில் உள்ள நீரைப் பல்லி சுவாசிப்பதன் மூலம் எடுத்துக்கொள்கிறது. பல்லி சுவாசிக்கும்பொழுது தனக்கு வேண்டிய நீரைக் காற்றிலிருந்து எடுத்துக்கொள்கிறது. நீரிலே வாழுகின்ற மீனுக்குக் காற்றுத் தேவைப்படுகிறது. நீரில் காற்று இருக்கிறது. நீரிலிருந்து தேவையான அளவு காற்றை மீன் எடுத்துக் கொள்கிறது. நீர் என்னும் பூதம் உண்டான பின்தான் உயிர் தோற்றத்துக்கு வருகிறது. நீர் இல்லாமல் போகப்போக உயிர்கள் ஒடுங்குகின்றன. இமயமலையில் உறைபனி உருகி ஆறாக ஓடுகிறது. பனி உருகி வருகின்ற நீரைக் காய்ச்சிக் குடிக்காவிட்டால் வயிற்றுப் போக்கு ஏற்படும். உறைபனியிலும் உயிர்த் தத்துவம் இருக்கிறது. நீரைக் காய்ச்சும் பொழுது அதிலுள்ள உயிர் செத்துப் போகிறது. நீர் மிகக் குளிர்ந்த நிலையில் இருக்கும் பொழுது ஓர் உயிர் அதில் வடிவெடுத்து வருகிறது. நீர் சாதாரண நிலையில் இருக்கும் பொழுது அநேகமாக எல்லா உயிர்களுக்கும் பயன்படுகிறது. நீர் ஆவியாகும்பொழுது சில உயிர்களுக்குப் பயன்படுகிறது. நீரிலிருந்து நிலத்துக்கு வருகிற நிலை கூர்மாவதாரமாகும். ஆமை, தவளை, நண்டு முதலியன நீர், நிலம் ஆகிய இரண்டிலும் வசித்திருக்கின்றன. அவை யாவற்றுக்கும் பொதுப்பெயர் கூர்மாவதாரம். அதற்கு அடுத்த நிலையில் உள்ள உயிர் நிலத்தில் வசிக்கிறது. ஆனால் நீரினிடத்து அபிமானம் கொண்டிருக்கிறது. அது வராக அவதாரம் ஆகும். பன்றி, எருமை, நீர்யானை இவைகள் எல்லாம் இவ்வித உயிரினத்தைச் சேர்ந்தவை ஆகும். நமக்கும் நீரினிடத்து நாட்டம் வருகிறது. நீர் நிலைகளில் நீந்தி விளையாட உற்சாகம் உண்டாகிறது. இது பூர்வஜன்மமாகிய மத்ஸ்ய அவதாரத்தில்பெற்ற சம்ஸ்காரம் ஆகும். வராக அவதாரத்திற்கு மேலே ஒருபடி பரிணமித்து வருகிறபொழுது மக்கள், விலங்கு ஆகிய இரண்டுக்கும் இடைப்பட்ட நிலை வந்தமைகிறது. அந்தநிலையை நரசிம்ம அவதாரம் என்று புராணம் கூறுகிறது. அந்நிலையில் ஒரு வடிவத்தை இப்பொழுது நாம் காண்பதில்லை. ஆனாலும் மனிதத் தன்மை விலங்குத் தன்மை கூடியிருப்பதை நரசிம்ம மூர்த்தி என்று சொல்லலாம். நம்மில் பெரும்பாலோர் நரசிம்ம மூர்த்திகளாகவிருக்கின்றோம். குட்டையான மனிதனைவாமனஅவதாரம் என்று புராணம் கூறுகிறது. தத்துவ ரீதியாகச்சிறிய மனப்பான்மை படைத்தவர்கள் எல்லாரும் வாமனர்கள் ஆகின்றார்கள். பரசுராமன் அவதாரத்தில் மனிதத் தன்மை இடம் பெறுகிறது. தற்பெருமை, முன்கோபம் முதலிய சில குறைகள் அவரிடம் இருக்கின்றன. பண்பட்ட குறையில்லாத நிறைமனிதன் தசரதராமன் ஆகின்றான்.

வடிவத்தில் மானுடனாக மட்டும் இருந்து முற்றிலும் பாரமார்த்திக நிலையில் இருப்பது கிருஷ்ணன். நம்முடைய முயற்சியில் இத்தனை நிலைகளையும் நாம்பெற்றுவிடலாம் என்பதைப் புத்தருடைய வாழ்க்கை காட்டுகிறது. இறுதியில் சிருஷ்டி முழுவதும் துடைக்கப்படுகிறது. அது கல்கி அவதாரம். துடைக்கப்படும் செயல் என்றைக்கும் நிகழ்ந்து வருகிறது. இன்றைக்கு இருந்தாரை நாளைக்கு இருப்பர் என்று எண்ணவோ திடமில்லை என்ற உண்மையை நாம் காண்கின்றோம். தசாவதாரச்செயல்களைக்ஷணந் தோறும் இயற்கையில் நாம் கண்டு வருகின்றோம். விராட் மயமாக இருக்கின்ற பராசக்தி சொருபத்தில் இவையாவும் இடம் பெற்றிருக்கின்றன.

பராசக்தி எப்படியிருக்கின்றாள் என்பதை க்ஷேத்திர சொரூபா, மகாரூபா என்ற நாமங்கள் விளக்குகின்றன. அவ்விரண்டு நாமங்களும் கிட்டத்தட்ட ஒரே பொருளைத் தருகின்றன. நாம் பயன்படுத்தி வருகின்ற சரீரத்துக்கு க்ஷேத்திரம் என்று பெயர். விலங்குக்கு அதன் சரீரம் க்ஷேத்திரமாக அமைந்திருக்கிறது. புழுவிற்கு அதன் சரீரம் க்ஷேத்திரமாக அமைந்திருக்கிறது. பிரம்மாவிற்கு அவர் சரீரம் க்ஷேத்திரமாக அமைந்திருக்கிறது. சாகுபடி செய்கின்ற நிலத்திற்கும் க்ஷேத்திரம் என்று பெயர். கோவில் குளம் முதலான இடங்களுக்கும் க்ஷேத்திரங்கள் என்று பெயர். கட்புலனாகின்ற இப்பிரபஞ்சம் க்ஷேத்திரம் ஆகும். பஞ்சபூதங்களின் சேர்க்கையாக இருப்பது க்ஷேத்திரம். ஒவ்வொரு ஜீவனும் தனக்கேற்ற க்ஷேத்திரத்தை எடுத்திருக்கிறது. தேகம் எடுப்பதற்கு மூலப்பொருளாகப் பிரபஞ்சம் என்கின்ற க்ஷேத்திரம் அமைந்திருக்கிறது. அகிலாண்டமும் அம்பிகையின் ஸ்தூலத் தோற்றமாகும். அம்பிகைக்கு விச்வரூபா என்ற பெயரும் உண்டு. மகாரூபா, விச்வரூபா என்ற நாமங்களும் ஒரே பொருளைத்தருகின்றன. எங்குத் திரும்பி எப்பொருளைப் பார்த்தாலும் அப்பொருளின்வடிவத்தில் அம்பிகை இருக்கின்றாள். அம்பிகைக்குப் புறம்பாக ஒன்றும் இல்லை. நம் வாழ்க்கைக்குப் பிரதிகூலமானதைக் கெட்டது என்று சொல்கிறோம். இயற்கையின் பேரமைப்பில் கெட்டதற்கும் இடமுண்டு.பாண்டவர்கள், கௌரவர்கள் என்பவர்கள் தாயாதிகள். நம் நிலையில்அவர்களை வைத்து ஆராயுமிடத்துக் கௌரவர்களைக் கெட்டவர்கள் என்றும், பாண்டவர்களை நல்லவர்கள் என்றும் பகர்கின்றோம். ஸ்ரீ கிருஷ்ணன் தம்முடைய விச்வரூபதரிசனத்தை அர்ஜுனனுக்குக் காட்டினார். அவ் விச்வரூபதரிசனத்தில் அர்ஜுனன் தன் எதிரிகளாக இருந்த கௌரவர்களும் இடம் பெற்றிருப்பதைக் காண்கின்றான். ஏனென்றால் கிருஷ்ணனுக்குப் புறம்பாக எதுவும் இருக்க முடியாது. சிவபெருமான் சிவசக்தி மயமாக ஸ்தூல சரீரம் எடுக்குமிடத்து விஷப்பாம்பும் அங்கு இடம்பெறுகிறது. அவருக்குப் பன்னகபூஷணன் என்பது பெயர். பாம்பை அவர் ஆபரணமாக அணிந்திருப்பதன் மூலம் தமக்குப் புறம்பாக எந்த உயிரும் இல்லை என்பதை விளக்கிக் காட்டுகிறார். சராசரங்கள் அனைத்தும் அம்பிகையின் தோற்றங்களாகும். இவ்வுண்மையை ஆழ்ந்து தியானம் செய்யுமிடத்துஎல்லா வடிவங்களிலும் ஏக காலத்தில் அம்பிகை இலங்குவது விளங்குகிறது. ஆரம்பநிலையில் இருக்கின்ற உயிர்,அதீதநிலையை எட்டுகின்ற ஜீவன், பிறகு எல்லாம் சம்ஹாரம் ஆகின்ற நிலை இத்தனையுமாக அம்பிகை இருக்கின்றாள். பௌதிக விஞ்ஞானிகள் இன்ன பொருள் இன்ன காரியத்துக்குப் பயன்படும் என்பதைக் கண்டுபிடிக்கின்றார்கள். பிறகு விரைவில் அப்பொருள்களை அக்காரியங்களுக்குப் பயன்படுத்துகின்றார்கள். சிறு துரும்பும் பல் குத்த உதவும் என்பது பழமொழி. எல்லாப் பொருள்களும் பயன்பட்டு வருகின்றன என்பதைப் பௌதிக விஞ்ஞானம் நிரூபித்து வருகிறது. தத்துவ ஆராய்ச்சிபடி காண்கின்ற இவையாவற்றின் சொருபங்களாக அம்பிகை விளங்குகின்றாள். இக்காட்சியின்கண் பேதத்தைத் காண்பவர்கள் அக்ஞானிகள். இதன்கண் ஒற்றுமையைக் காண்பவர்கள் ஞானிகள். அம்பிகையை முறையாக உபாசிக்கின்றவர்களை அவள் ஒற்றுமையின்கண் எடுத்துச் செல்கின்றாள். அம்பிகையை முறைதவறி உபாசிக்கின்றவர்கள் துன்பத்துக்கு ஆளாகிறார்கள். அம்பிகையை முறையாக உபாசிக்கின்றவர்களுக்கு அவள்தம்மகிமை முழுவதையும் விளக்கிக்காட்டுகிறாள். அம்பிகையை முறையாக உபாசித்து அவள் அருளைப் பெறவேண்டும். (தொடரும்)

# மன அமைதி

பேதத்தை வளர்ப்பது அக்ஞானம். அபே தத்தை வளர்ப்பது ஞானம். இது ராம கிருஷ்ணரின் உபதேசமாகும். திருக் திருசி யம் என்ற இரண்டனுள் திருக்காக இருப்பவ னுடையஅந்தக்கரணம் மாறியமைகின்ற அளவு திருசியமாகிய உலகத்தின் காட்சியும் மாறி யமைகிறது. நல்ல மனம் படைத்த யுதிஷ்டிரர் உலகத்தில் நல்லதையே கண்டார். கெட்ட மனம் படைத்த துரியோதனன் உலகத்தில் கேட்டையே கண்டான். குண வேறுபாடு களுக்கேற்ப வஸ்துக்களுக்கிடையில் பேதம் திகழுகிறது. புறத்தோற்றத்துக்குத் தமோ குணமும், சத்வகுணமும் ஒன்றுபோலத் தோன் றும். தமோகுணம் செயலற்ற தன்மையாகும். சத்துவகுணம் செயலின் உச்சநிலையாகும். செய லின் உச்சநிலைக்குப் போகப் போக வெளி ஆடம்பரங்கள் குறைந்து அமைதி நிலவுகிறது. செயலின் உச்சநிலையில் பேராற்றல் வெளிப்படு கிறது. அமைதியான முறையில் அது விளைவை உண்டுபண்ணுகிறது. மனம் அடங்கப்பெற்ற நிலையே செயலின் உச்சநிலையாகிறது. மனம் அடங்கப்பெற்றவர்கள் மூலம் உலகுக்குப் பெரு நலன் விளைகிறது. மனம் அடங்கப்பெருதவர் கள் இங்கும் அங்கும் ஓடியாடி அலைகின்ருர்கள். அவர்கள் வியவகாரத்தைப் பெருக்கிக் கொண்டே இருப்பார்கள். மனம் அடங்க அடங்க விச்ராந்தி உண்டாகிறது. விச்ராந்தி யில் நிலைபெற்றிருப்பவர்கள் மூலம் உலகுக்குப் பெருநலன் உண்டாகிறது.

பெருங்கூட்டம் ஒன்றில் குழப்பம் ஏற்பட் டால் அக்குழப்பத்துக்கிடையில் மனதை நடு நிலையில் வைத்து அமைதியோடு இருப்பவர் மற்றவர்களுடைய உள்ளத்தில் சாந்தியை உண் டாக்குகிருர். அக்குழப்பத்துக்கு வசப்பட்டுப் பதட்டநிலையை அடைபவர் மேலும் குழப் பத்தை வளர்ப்பவர் ஆகின்ருர். மேல் நாட்டார் ஒருவர் தம்மிடத்தில் எழுந்த பல கேள்விகட்கு விடைகாண வேண்டுமென்று ரமணமகரிஷி யிடம் வந்தார். ரமணமகரிஷியின் முன்னிலையில் வந்ததும் அவரிடத்தில் எழுந்த கேள்விகள் ஒவ் வொன்றுக்கும் அவர் உள்ளமே விடையளித்து வந்தது. மற்றுமொருவர் கருத்தடையைப் பற்றித் தங்களுடைய அபிப்பிராயம் என்ன வென்று ரமணரிடம் பல முறை கேட்டார். மக ரிஷி அமைதியாய் இருந்து கடைசியாக " மரணத்தடையைப்பற்றி உங்களுடைய அபிப் பிராயம் என்ன ?" என்று அவரைக் கேட்டார். அதைக் கேட்டதும் அவருக்கு விஷயம் விளங்கி விட்டது.

விவேகானந்த சுவாமிகள் பவாஹாரிபாபா விடமிருந்து பேருண்மை ஒன்றைத் தெரிந்து கொண்டார். விவேகானந்த சுவாமிகள் பவா ஹாரிபாபாவைப் பார்த்து ''நீங்கள் உலகத்துக் குத் தெரியாமல் இருப்பதனுல் உலகுக்குஎன்ன நலன் ?'' என்று கேட்டார் ''சரீரத்தின் மூல மாகத்தான் உலகுக்கு உதவிசெய்யமுடியுமா ?'' என்று விவேகானந்தரைத் திருப்பிக் கேட்டார். அப்பொழுது விவேகானந்த சுவாமிகளுக்கு விஷயம் விளங்கிவிட்டது. சரீரத்தின் மூலம் தங்களை உலகுக்குக் காட்டிக்கொண்ட புத்தர், சங்கரர், ஏசு போன்றவர்களெல்லாரும் இரண் டாம்தரமான ஆசாரியர்களாகிருர்கள். முதல் தரமான ஆசாரியர்கள் தங்களை உலகுக்குக் காட்டிக்கொள்ளாது மறைவிலிருந்து உலகைக் குறித்து நல்லெண்ணம் எண்ணியதன் மூலம் உலகுக்குப் பெரு நன்மை செய்திருக்கிருர்கள். அவர்கள் சங்கல்பத்தையே இரண்டாம்தர மான ஆசாரியர்கள் செயலுக்குக் கொண்டு வந்தார்கள்.

மலை மலையாகப் பேசுவதைவிடப் பேச்சைக் குறைத்தவர்களே உலகுக்குப் பெருநலன் செய் திருக்கிருர்கள். பேச்சைக் குறைப்பது எல் லாத்துறைகளுக்கும் பொருந்தும். நீதிமன்றத் தில் கீழ்மட்டத்திலுள்ள வழக்கறிஞர்கள் சண் டப்பிரசண்டம் செய்வார்கள். மேல்மட்டத்தி லுள்ளவர்கள் சட்டரீதியான இரண்டொரு வார்த்தைகளைச் சொல்லுவார்கள். அவை சரி யாக இருக்கும். வைத்தியத்துறையிலும் பண் பட்டவர்களுக்கு நோயைப் பற்றிய விஷயம் தெளிவாக விளங்குகிறது. கொழும்பில் பிரே மாத்மானந்த சுவாமிகள் தம்முடைய வியாதி ஒன்றுக்குச் சிகிச்சை பெறப் பல வைத்தியர் களை அணுகினர். அதற்குச் சரியான மருந்து யாரும் தரமுடியவில்லை. கடைசியாகச் சென்னை

யிலுள்ள டாக்டர் ஒருவரைச் சந்தித்தபொழுது "உடலில் சில அறிகுறிகள் உண்டாகின்றனவா?" என்று அந்த டாக்டர் கேட்டார். அவர் கேட்ட அறிகுறிகள் உண்டாகின்றன வென்று சுவாமிகள் பகர்ந்தார். நோய்க்குரிய மருந்தை அவர் எழுதிக் கொடுத்தார். அம்மருந்தைச் சாப்பிட்டதும் சுவாமிகளுக்குக் குணமாகிவிட்டது. ஆனல் சில நாட்கள் பொறுத்து அந்நோய் மறுபடியும் வந்தது. அப்பொழுது அதே டாக்டரை அணுகியபொழுது அதே மருந்தைத் தொடர்ந்து சாப்பிடும்படிகூறினர். அவருடைய நோய்க்கு அம்மருந்துதான் முடிவானது. அதைத் தவிர வேறு வழியில்லை. அதைக்கொண்டு திருப்தியடைய வேண்டியது தான் என்று கூறிவிட்டார். விச்ராந்தி நிலைக்கு மனதைப் பண்படுத்தும்பொழுது தெளிவான விளக்கம் கிடைக்கிறது.

மனம் முக்குணங்களுக்கு வசப்பட்டிருக்கிறது. மனதில் தமோகுணம் மேலிட்டிருக்கும்பொழுது அது செயலற்று இருக்கிறது. மனதில் ரஜோகுணம் ஓங்கியிருக்கும்பொழுது அது அலைகிறது. பரபரப்பும், அசாந்தியும் மனதின்கண் அப்பொழுது நிலவுகின்றன. மனதில் சத்துவகுணம் ஓங்கும் பொழுதுதான் அது அமைதியாகச் சொருபத்தில் நிலைத்திருக்கிறது. ஆசைக்கு வசப்படாது திறமையோடு செயல்புரியும் பொழுதுதான் சத்துவகுணம் ஓங்குகிறது. சந்தடிகளுக்கிடையிலும், குழப்பங்களுக்கிடையிலும் அமைதியோடு இருந்து பழகவேண்டும். உலகக் கிருத்தியங்கள் நிகழ்வதற்கிடையில், உள்ளம் பரத்தைச் சார்ந்திருக்க வேண்டும். தனித்திருக்கையில் உள்ளத்தில் தெய்வச் சிந்தனையைத் தவிர வேறு சிந்தனை இடம்பெருது இருக்கவேண்டும். காம உணர்ச்சியை ஊட்டக் கூடிய சூழ்நிலையில் மனம் புறத்தே செல்லாது உள்முகமாக நோக்கிச் செல்லவேண்டும். தனிமையாக இருக்கையில் காம சம்பந்தமான எண்ணங்கள் உள்ளத்தில் தோன்றி வராமலிருக்கவேண்டும். இத்தகைய மனநிலைதான் நமக்குச் சாந்தியைத்தரும்.

சும்மா இருப்பதுவே சுட்டற்ற பூரணம் என்று தாயுமானவர் இயம்பியுள்ளார். மனம் முற்றும் அடங்குவதுதான் சும்மா இருப்பதற்கு விளக்கம் ஆகும். மெய்யடக்கம், நாவடக்கம், மனவடக்கம் மூன்றும் நிறை நிலையடையவேண்டும். இம்மூன்று அடக்கங்களும் நிறைநிலையை யடையப் புலனடக்கம் அத்தியாவசியமாகிறது. வாய் பேசாமல் இருந்து பழகுவது மன அடக்கத்திற்கு முதல் படியாகிறது. வாயைக் கட்டி வைப்பது பலருக்குச் சாத்தியமில்லை. ஏதாவது பேசிக்கொண்டு இருப்பதுதான் பலருடைய இயல்பாக இருக்கிறது. அந்தர்யோகம் என்னும் சாதனைப் பயிற்சியில் சிறிது நேரம் வாய் பேசாமல் இருக்கும் திட்டம் உள்ளது. அச்சாதனையில் பயிற்சி பெருதவர்கள் அந்தத் திட்டத்தை நிறைவேற்றத் தவறிவிடுகிருர்கள். அடக்கத்தின் முதல் படியாக இருக்கின்ற வாய் பேசாது இருத்தல் என்னும் செயலையே செய்ய முடியாதவர்கள் அடக்கத்தின் உச்ச நிலையில் இருக்கிற மனம் அசையாதிருத்தல் என்பதை எப்படிக் கையாள முடியும்? மனதை அடக்குதல் அரிய செயல் ஆகிறது. வாழ்க்கையில் அச்செயலைச் செய்து சாதித்தாக வேண்டும். இல்லையேல் அமைதிக்கு வழியில்லை. இப்பூவுலக வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகள் யாவும் பெற்றுள்ள நாட்டு மக்கள் மன அமைதியில்லாது அலைகின்றனர். மன அமைதி இல்லாதபொழுது சரியானபடி செயலும் கைகூடுவதில்லை. மன அமைதியற்றவர்களே தற்கொலை செய்து கொள்கிருர்கள். மன அமைதி உடையவர்க்கு எத்தகைய வாழ்க்கைப் பிரச்சினையும் இல்லை. மரணத்தையும் அவர்கள் அமைதியுடன் ஏற்கின்ருர்கள். வாழ்ந்திருப்பதும், மரணமடைவதும் அவர்களுக்கு ஒன்றே.

'யானேதும் பிறப்பு அஞ்சேன்
இறப்பு அதனுக்கு என்கடவேன்?'

என்கிருர் மாணிக்கவாசகர். உடலுக்கு வருகின்ற பிறப்பையும் இறப்பையும் அவர்கள் பொருள்படுத்துவதில்லை. மேலும் அவர்கள் பூவுலக, விண்ணுலக சுகங்களையும் நாடுவதில்லை. இதனை மாணிக்கவாசகர்,

'வானேயும் பெறில் வேண்டேன்
மண் ஆள்வான் மதித்தும் இரேன்'

என்கிருர். ஈசனுடைய அருள் ஒன்றை மட்டும் அவர்கள் உள்ளம் நாடி இருக்கிறது. மன அமைதி பெற்றுப் பேரானந்தம் அடைந்திருக்கும் பெருநிலையைத் தரவேண்டுமென இறைவனைப் பிரார்த்தித்துக்கொள்வோமாக.

---

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-127

731. प्रियंकरी ப்ரியம்கரீ — பிரியத்தை உண்டுபண்ணுபவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

பஞ்சேந்திரியங்களோடு கூடியிருப்பது ஜீவாத்மனுடைய பாங்கு ஆகிறது. ஆத்மா தன்னளவில் ப்ரியம் அல்லது ஆனந்த சொரூபி. ஜீவாத்மனே பிரபஞ்சத்தோடு தன்னை இணைத்துக்கொண்டிருக்கிறான். அத்தகைய பிரபஞ்சத்தில் உள்ள கூறுகளை நுகர்தற்குப் பஞ்சேந்திரியங்கள் பயன்படுகின்றன. பிரபஞ்சத்திலுள்ள கூறுகள் இன்பதுன்பமாயிருக்கின்றன. துன்பத்தைத் தவிர்த்து இன்பத்தை ஏற்று இன்புற்றிருக்க ஜீவாத்மன் முயலுகிறான். அதற்குப் பஞ்சேந்திரியங்கள் எப்படிப் பயன்படுகின்றன என்று பார்ப்போம்.

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்று ஐந்தின் வகைதெரிவான்கட்டே உலகு என்பது மறைமொழி. ஐந்து இந்திரியங்கள் ஐந்து வாயில்களாக ஜீவாத்மனுக்கு அமைந்திருக்கின்றன. இந்த வாயில்களை உபாயமாகக் கொண்டு புறவுலகோடு ஜீவாத்மன் இணக்கம் வைக்கிறான். உணவு உண்பது ஜீவாத்மனுடைய வாழ்க்கைக்கு இன்றியமையாத செயலாகிறது. நலம் தரும் உணவில் சுவை புதைந்திருக்கிறது. கேடுதரும் உணவு அதற்கு நேர்மாறாக அமைந்திருக்கிறது. ஜீவாத்மன் நா என்னும் இந்திரியத்தைக்கொண்டு உணவை ஆராய்ச்சிபண்ணிப் பொருந்துகிற உணவைப் பிரியத்துடன் புசிக்கிறான். பொருந்தாத உணவு பிரியத்தை உண்டுபண்ணுவதில்லை. ஆதலால் அதை அவன் ஒதுக்கி வைக்கிறான். கண் கொண்டு புறவுலகிலுள்ள வடிவங்களை ஜீவாத்மன் காண்கிறான். தனக்கு நலம் தரும் வடிவங்களை அவன் பிரியத்தோடு அணுகுகிறான். துன்பம் தரும் வடிவங்களை அவன் ஒதுக்கி வைக்கிறான். ஊறு அல்லது ஸ்பரிச உணர்ச்சி உடலெங்கும் வியாபித்திருக்கிறது. சீதம், உஷ்ணம், கடினமானது, மிருதுவானது, இன்பம் தருவது, துன்பம் தருவது ஆகியவைகளை ஊறு அல்லது ஸ்பரிச உணர்ச்சி ஜீவாத்மனுக்கு விளக்குகிறது. தனக்கு அனுகூலமாயிருக்கும் ஸ்பரிச உணர்ச்சியைப் பிரியத்துடன் ஜீவாத்மன் ஏற்றுக்கொள்கிறான். பிரதிகூலமாயிருக்கும் ஸ்பரிச உணர்ச்சியை அவன் ஒதுக்கி வைக்கிறான். வெளி உலகின் பாங்கு ஓசையின் வாயிலாக ஜீவாத்மனுக்கு வந்து சேருகிறது. காது என்னும் கருவியைக்கொண்டு அவன் அந்த ஓசையை ஏற்றுப் புலப்படுத்துகிறான். தனக்குப் பயன்படும் செய்தியைத் திருப்தியுடன் வாங்கிக் கொள்கிறான். பயன்படாததை விலக்கி வைக்கிறான். சுவாசிக்கின்ற காற்றின் தரத்தை மூக்கைக்கொண்டு மோப்பம் பார்த்து ஜீவன் அறிந்து கொள்கிறான். தூய காற்றுக்கு மணம் ஏதுமில்லை. நச்சுக் காற்றே துர்நாற்றம் உடையதாக இருக்கிறது. ஜீவாத்மன் அதினின்று விலகிக் கொள்கிறான். சுகந்தம் அல்லது நறுமணம் அவனுக்குப் பிரியத்தை உண்டு பண்ணுகிறது. தாற்காலிகமாகச் சுகந்தத்தைச் சிறிது நேரம் மனிதன் சுவாசித்துக் கொண்டிருக்கலாம். நெடுநேரம் அதைச் சுவாசிப்பதால் நலன் வாய்க்காது. சிறிது சிறிதாகக் கேடு உண்டாகும். இங்ஙனம் ஐந்து இந்திரியங்களைக் கொண்டு ஜீவாத்மன் புறவுலகோடு ப்ரீதிகரமான இணக்கம் வைத்து இன்புற்று இருக்கிறான். இதற்கு உறுதுணையாயிருப்பவள் அன்னை பராசக்தி. ஆதலால் அவள் ப்ரியம்கரீ என்னும் நாமம் பூண்டுள்ளாள்.

732. नाम पारायण-प्रीता நாம பாராயண ப்ரீதா — நாமங்களைக் கருத்துக்கூடி சொல்லுவதில் விருப்பம் உடையவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

அம்பிகையின் நாமங்கள் எண்ணிக்கையில் அடங்காதவைகள். இயற்கையில் என்னென்ன ஓசை எங்கெங்கு எப்படி எப்படி உண்டாகிறதோ அந்த ஒவ்வோர் ஓசைக்கும் பொருள் உண்டு. அவைகளை ஆராய்ந்தால் அகண்டாகாரத்தில் விரிந்தோடும். அவையாவையும் ஓதுதற்கோ, ஆராய்தற்கோ மனிதனுக்கு ஆயுள் போதாது. ஆதலால் அம்முறையை மனிதன் கையாளவேண்டியதவசியமில்லை. ஆத்ம சாதனத்தில் ஈடுபடுகிற மனிதன் நாம உச்சாரணை சம்பந்தமாக என்ன செய்யவேண்டும் என்பதை ஓர் உபமானக்கதையின் வாயிலாகப் பரமஹம்சதேவர் பகர்கிறார். குடிகாரன் ஒருவன்

சாராயம் முதலிய லாகிரி வஸ்துக்கள் கிடைக்கும் கடைக்குச் சென்றுன். அவனுக்குத் தேவையாயிருந்தது ஒரு சிறு கோப்பை மது பானம். அதை அருந்தினுலேயே அவனுக்குப் போதையால் தலை திருகிவிடும். இனி பீப்பாய் பீப்பாயாக அக்கடையில் வைத்திருக்கும் மதுபானங்களைக் கணக்கிட அவன் எதற்காக முயலவேண்டும்? அதற்கு நிகராக பரம்பொருளின் அனுக்ரஹம் அவனுடைய சொருபத்தின் ஒரு கிரணத்தின் மூலமாக வந்தால் போதுமானது. அப்படியிருக்க அந்தப் பரவஸ்துவைப்பற்றிய விபூதிகளை ஆயிரம் ஆயிரம் நாமங்களைக்கொண்டு ஆராய்ச்சி பண்ணுவது எதற்காக?

அனுக்ரஹத்தை நாடுகிறவனுக்கு அம்பிகையின் நாமங்களுள் ஒரு சிலவற்றின் பொருள்கள் விளங்கினுல் போதுமானது. கணக்கற்ற நாமங்களின் உட்கருத்துக்களை ஆராய்வதில் அலைமோதித் திரிவது வீண் பொழுதுபோக்குவதாகும். அச்செயல் மரத்திலுள்ள கனியை அருந்துவதற்குப் பதிலாக இலைகளை எண்ணிக்கொண்டிருப்பதற்கு நிகராகும். விவேகம்படைத்துள்ள ஆத்ம சாதகன் அங்ஙனம் நிலை தடுமாறிப் போகலாகாது. அம்பிகைக்குரிய ஆயிரம் திருநாமங்கள் இந்நூலில் அடங்கியிருக்கின்றன. அவைகளுள் தனக்கு எளிதில் விளங்குகிற சில நாமங்களை எடுத்துக்கொண்டு அவைகளில் தன் மனது லயமாகும்படி செய்வானுகில் அவன் உய்வு அடைவது திண்ணம். அச்செயலில் அம்பிகையும் ப்ரீதியடைந்து இருப்பாள் என்பது இந்த நாமத்தின் உட்பொருள்.

**733. नन्दिविद्या நந்தி வித்யா** — நந்திகேஸ்வரரால் உபாசிக்கப்பட்ட வித்யாரூபமாக இருப்பவள் என்பது இந்த நாமத்தின் உட்பொருள்.

அம்பிகைக்குரிய ஆயிரக்கணக்கான நாமங்களுள் நந்திகேஸ்வரர் தமக்கு இஷ்டமான ஒரு நாமத்தைப் பொறுக்கி எடுத்தார். அதில் தீவிரமாக அவர் கருத்தைச் செலுத்தினுர். சாதனத்தில் அவர் விரைந்து மேலே சென்றுர். ஜன்மசாபல்யம் ஆனுர். நல்ல உபாசகர்களுக்கு அவர் முன் மாதிரியாகின்றுர்.

**734. नटेश्वरी நடேச்வரீ** — நடேசுவரருடைய சக்தி சொருபமாக இருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

சக்தியும் சிவமும் ஒன்றே. சிவனுருடைய உபாசகர்கள் நடனேசுவரனுக இலங்கும் அதே மெய்ப்பொருளை அம்பிகையின் உபாசகர்கள் நடனேசுவரீ எனக் கருதுகிறுர்கள். பால் வேற்றுமையைக் கடந்து இருக்கிற பரவஸ்துவை ஆத்ம சாதகர்கள் அவரவர் இயல்புக்கேற்ப ஆண்பாலாகவோ பெண்பாலாகவோ கருதிக் கொள்கிறுர்கள். அப்படி அவர்கள் கருதுவது பரமனுக்கு முற்றிலும் சம்மதம்.

அம்பிகையின் நடனத்தின் விளைவாக அண்டங்கள் ஒழுங்காக இலங்குகின்றன. நடனத்துக்கு ஒத்த பாங்கில் இசை வந்து அமைகிறது. இசையில் ராகமும், தாளமும் இடம் பெறுகின்றன. அண்டங்களின் சலனத்தால் அற்புதமான ஓசைகள் கிளம்புகின்றன. அந்த ஓசைகளின் ஒழுங்குப்பாட்டால் ராகங்கள் உருவெடுக்கின்றன. அண்டங்கள் வடிவெடுப்பதும், ஒடுங்குவதும் காலக்கிரமத்தை அனுசரித்திருப்பதால் தாளம் தவறிப் போவதில்லை. ஆதலால் அண்டங்களின் நடைமுறைகளை ரசிப்பதே நடனேசுவரியின் மகிமையை ரசிப்பதாகும். அம்பிகையின் ஸ்தூல அமைப்பில் இத்தகைய மகிமைகளெல்லாம் அமைந்திருக்கின்றன என்று ஓர்ந்து அனுபவிப்பது அம்பிகைக்குரிய நல்ல ஆராதனையாகும்.

**735. मिथ्याजगत् अधिष्ठाना மித்யா ஜகத் அதிஷ்டானு** — தோன்றி ஒடுங்கும் ஜகத்துக்கு அதிஷ்டான தேவதையாக அல்லது தலைவியாக அம்பிகை அமைந்துள்ளாள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

மித்தை என்னும் சொல்லைப் பொய் என்று பலர் பொருள்படுத்துகின்றனர். ஒன்றுமில்லாத சூனியத்தைப் பொய் என்று பகரலாம். உள்ளதை இல்லையென்று இயம்புவது தத்துவமாகாது. ஜகத் என்னும் சொல் கச் என்னும் அடிச்சொல்லிலிருந்து வந்துள்ளது. ஜகத் அல்லது பிரபஞ்சம் சதா நிலைமாறியமைந்து கொண்டிருப்பது என்பதாம். ஜகத் என்னும் சொல்லுக்கு நிகராகத் தமிழில் இயற்கை என்னும் சொல் வந்துள்ளது. எது சதா இயங்கிக்கொண்டிருக்கிறதோ அது இயற்கை. ஜகத் என்பதற்கும் இயற்கை என்பதற்கும் அம்பிகை அதிஷ்டான தெய்வமாகின்றுள்.

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி: (193) இறைவனே, அனைத்து உயிர்களுமாய் விளங்குகின்றீர் என்றால் இராமன், கிருஷ்ணன் போன்றோர்களை மட்டும் ஏன் அவதாரமாகக் கொள்ள வேண்டும்?**

இயற்கையிலுள்ள அனைத்தும் பரம்பொருளின் ஸ்தூலத்தோற்றங்களாம். உலகனைத்தும் ஆனாய் நீயே என்பது மறைமொழி. ஸ்தாவர உலகை ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டால் அதில் பயன்படுவன, பயன்படாதவை, பாழ்படுத்துபவை ஆகிய யாவும் அமைந்திருக்கின்றன. பயன்படாத காட்டுச் செடிகளை ஏராளமாகக் காண்கிறோம். விஷம் நிறைந்த முள்ளுடைய செடிவகைகளைக் காண்கிறோம். விஷம் நிறைந்த கனிகளை உண்டுபண்ணுகிற மரம் செடி கொடிகளும் உண்டு. வாழை, தென்னை போன்றவை கற்பக விருக்ஷத்துக்கு நிகரானவை. அவைகளை மட்டும் பாதுகாப்புடன் வளர்த்து வருகிறோம். அப்படிச் செய்வது முறை.

பூமியில் கல் வகைகள் பலதரப்பட்டவைகள் இருக்கின்றன. அவைகளுள் பிரகாசிக்கும் பாங்குடைய ரத்தினங்களை மட்டும் ஆபரணங்கள் பண்ணுதற்கு எடுத்துக்கொள்கிறோம்.

மக்களுள் நல்லவர்கள், கெட்டவர்கள் ஆகிய எல்லாப் பாங்குடையவர்கள் இருக்கிறார்கள். கொடூர விலங்கினும் கொடிய மக்கள் இருக்கிறார்கள். அவர்களோடு இணக்கம் பூணலாகாது. இராமன், கிருஷ்ணன் போன்ற மூர்த்திகள் தெய்விகப்பெற்றி வாய்க்கப் பெற்றவர்கள். அன்னவர்களைப் பின்பற்றினால் நாம் மேன்மையுறுகிறோம். பிரபஞ்சம் முழுதும் இறைவனுடைய அவதாரம் என்றாலும் இராமன் கிருஷ்ணன் போன்றவர்களைச் சிறப்பாக அவதார புருஷர்கள் என்கின்றோம். வணக்கத்துக்குரிய பெருமக்களையே அவதாரங்களாகக் கருதுவது முறை. அன்னவர்களைப் போற்றுவதற்கேற்ப உபாசகர்கள் பக்தியிலும், ஞானத்திலும், சீலத்திலும் மேன்மையுறுகின்றனர். பரிபூரணத்துடன் கூடியிருப்பவர்களே வழிபாட்டுக்குரியவர்கள் ஆகின்றனர். மக்கள் எந்த மூர்த்தியை உபாசிக்கிறார்களோ அந்த மூர்த்தியின் மகிமைகள் உபாசகர்களுக்குச் சொந்தமாகின்றன. இக்கோட்பாட்டின்படி இராமன், கிருஷ்ணன் போன்றவர்களை அவதார மூர்த்திகளாக ஏற்றுக்கொண்டு உபாசிப்பதே பொருத்தமுடையதாகும்.

**கேள்வி: (194) முன்னேற்றம் அடைதற்பொருட்டு உயிர்வகைகளுக்கிடையே ஏற்படும் போட்டி பொருந்துமா?**

போட்டிமயமாய்ப் பிரபஞ்சம் முழுதுமிருக்கிறது. ஸ்தாவர ஜங்கமங்களாக உயிர்வகைகள் அமைந்திருக்கின்றன. ஸ்தாவரங்களாகிய மரம், செடி, கொடிகளுக்கிடையில் போட்டி நிகழ்ந்து வருகிறது. வலிவு படைத்தவைகள், வலிவு அற்றவைகளை ஒழித்து, அல்லது ஒதுக்கித் தள்ளி முன்னேற்றமடைகின்றன. புழு, பூச்சி, முதலிய ஜங்கமங்களுக்கிடையில் போட்டியைக் காண்கின்றோம். நீரில் வாழ்பவைகளுக்கிடையில் போட்டி நிகழுகிறது. பறவைகளுக்கிடையில் போட்டி நிகழ்ந்து கொண்டிருக்கிறது. விலங்கு இனங்களுக்கிடையிலும் இதே திட்டம் நிகழ்ந்து வருகிறது. கடைசியாக மக்களுக்கிடையிலோ போட்டிக்கும், போராட்டத்திற்கும் முடிவே கிடையாது. இங்ஙனம் பிரபஞ்ச முழுதும் போட்டி மயமாக இருக்கிறது. ஆகவே இது பொருந்துமா என்னும் கேள்விக்கு இடமில்லை. உயிர் வாழ்பவைகளுக்கிடையிலுள்ள அடிப்படைத் திட்டம் போட்டி. வலிவு படைத்தவைகளே வாழ்க்கைக்குத் தகுதி உடையவைகளாய் இருந்து வருகின்றன. போட்டியில் பல தடவை தோல்வியடைந்தாலும் திரும்பத் திரும்பப் போட்டி போட்டுத் தன்னைத் தகுதியுடையதாக ஒவ்வோர் உயிரும் அமைத்துக் கொள்ளுகிறது. போட்டி மயமாயிருப்பது சிருஷ்டி. அமைதி மயமாயிருப்பது பிரளயம். சிருஷ்டிக்கு வந்துள்ளவைகள் போட்டி போட்டே ஆகவேண்டும். அதை நிறுத்துபவர்கள் அழிந்துபட்டுப்போவார்கள். வாழ்க்கைக்குத் தன்னைத் தகுதியுடையவனாக அமைத்துக் கொள்ளுதல் என்பதன் உட்பொருள் வாழ்வு என்னும் போராட்டத்தில் வெற்றிகரமாக ஈடுபடத் தன்னை ஆயத்தப்படுத்துதலாம்.

போட்டியிட்டு மேல் நிலைக்கு வருகிற மனிதன் பிறகு தன்னிடத்துள்ள நலன்களையெல்லாம் மனமுவந்து பிறர் முன்னேற்றத்திற்காக வழங்குகிறான். சுயநலத்திற்காக வாழாது பர நலத்துக்கெனவே அவன் வாழ்ந்திருக்கிறான். அவன் செயல் யக்ஞம் அல்லது வேள்வி எனப் பெயர் பெறுகிறது. அத்தகைய செயலின் விளைவாக அவன் பிறவிப் பெருங்கடலைக் கடந்து அதீத நிலைக்குப் போகிறான். இதுவே பிரபஞ்ச வாழ்வைப்பற்றிய உண்மை. ஆதலால் உயிர் வகைகளனைத்தும் போட்டியின் வாயிலாகத் தங்களுடைய தரத்தை மேன்மைப் படுத்திவருவனவாகுக. மேலாம் நிலை எட்டிய பிறகு தாங்கள் படைத்துள்ள நலன்கள் யாவையும் பிறர் நலனுக்காக வழங்கி வாழ்வை முடிவுக்குக் கொண்டுவரவேண்டும். வழங்குதற்கான பெருநிலையை அடைந்திருப்பவர்கள் அரியரிலும் அரியர். அந்நிலையை எட்டும் வரையில் மக்கள் போட்டியிடுவதை நிறுத்த முடியாது.

**கேள்வி (195) ஆராய்ச்சிக்காக உயிர் வகைகளைக் கொல்லலாமா?**

"கொல்லா விரதம் குவலயமெல்லாம் ஓங்க எல்லார்க்கும் சொல்லுதல் என் இச்சை பராபரமே" எனத் தாயுமான சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியிருக்கிறார். அது வாழ்க்கையின் குறிக்கோள். ஆனால் வாழ்க்கையின் துவக்கம் கொலைமயமாகவே அமைந்திருக்கிறது. எண்ணெய் இல்லாது தீபம் எப்படி எரியாதோ அப்படி உயிர் உயிரை மாய்ப்பதின் வாயிலாகவே பிரபஞ்ச வாழ்வு நடைபெற்று வருகிறது. மண்ணிலுள்ள (Bacteria) பாக்டீரியா என்னும் உயிர் வகைகளை உணவாக்கிப் பயிர்பச்சைகள் தழைத்தோங்குகின்றன. பிறகு அவைகள் ஒன்றனுக்கு ஒன்று உணவு ஆவதன் வாயிலாக உயிர் வாழ்வு நிறைவேறுகிறது. ஜங்கமங்கள் தோன்றி வந்து அடுத்தபடியாக ஸ்தாவர வர்க்கங்களைப் புசித்து வாழ்வைப் பேணி வருகின்றன. ஜங்கமங்களும் ஒன்றனுக்கு ஒன்று உண்பதற்கு உணவு ஆவதன் விளைவாகவே வாழ்வு மேலோங்குகிறது. உயிர் வாழுதல் பொருட்டு உயிர்வகைகள் அழிக்கப்படுவது ஒருபுறம் இருக்கிறது. வாழ்க்கைத் தத்துவத்தை அறிந்துகொள்ள முயலுவது ஒரு மேலாம் திட்டமாகிறது. தத்துவத்தை அறிந்துகொள்ளுதற்குக் கொல்லுதல் தேவையென்றால் அச்செயலிலும் மனிதன் ஈடுபட்டேயாக வேண்டும். இதை யொட்டிய பழமொழி ஒன்று உண்டு. ஆயிரம் கண்ணைக் கெடுத்தவன் அரை வைத்தியன் என்பது அக்கோட்பாடு. ஆராய்ச்சி பண்ணுகிறவன் தோல்வியடைகிற பொழுதெல்லாம் பிற உயிர்களுக்கு அழிவு அல்லது நஷ்டம் நிகழ்கிறது. அந்த அழிவுக்கும், நஷ்டத்திற்கும் மனிதன் ஆயத்தமாயிருக்க வேண்டும்.

பிறகு வாழ்வும் மாய்வும் இணைபிரியாதவைகள். வாழ்ந்திருக்க விரும்புகிறவன் மாய்ந்து போவதற்கும் ஆயத்தமாயிருக்க வேண்டும். நனவுக்கு நிகர் வாழ்வு. உறக்கத்திற்கு நிகர் சாவு. உறங்காது காலமெல்லாம் மனிதன் வாழ்ந்திருக்க முடியாது. அதே பாங்கில் சாவின் மூலமாக மனிதன் தன்னைப் புதுப்பித்துக்கொள்கிறான். சில வேளைகளில் யுத்தம் நிகழ்கிறது. அதில் மக்கள் பெருவாரியாக மாய்ந்து போகின்றனர். பஞ்சம் கொள்ளை நோய் வாயிலாகவும் ஏராளமாக மக்கள் மடிந்து போவதுண்டு. ஆதலால் வாழ்க்கைத் தத்துவத்தை அறிந்திருப்பவர்கள் மரணத்திற்கு அஞ்சாது இருந்து பழகவேண்டும். கொல்லுவதன் மூலமாகவும் சமுதாயத்திற்கு நலனை உண்டுபண்ணலாம். உண்டுபண்ண முடியுமானால் அச்செயலில் மனிதன் துணிந்து ஈடுபட்டேயாக வேண்டும்.

மகாபாரத யுத்தத்தைத் தவிர்க்க கண்ண பிரான் எவ்வளவோ முயன்றார். அவர் முயற்சி வெற்றியடையவில்லை. யுத்தத்தில் ஈடுபட வேண்டியது முற்றிலும் அவசியமாயிற்று. சமுதாயத்தோடு சமுதாயம் முரண்படுகிறது. அந்த முரண்பாடு இரண்டு சமுதாயங்களுக்கும் இடுக்கணை உருவெடுக்கிறது. காலமெல்லாம் சங்கடத்திற்கு உட்பட்டுத் திண்டாடிக் கொண்டு வாழ்ந்திருப்பதைவிட யுத்தத்தின் வாயிலாக நெருக்கடியைப் போக்கடிப்பது இன்றியமையாததாகிறது. மகாபாரதப் போர் அங்ஙனம் நிகழ்ந்ததாகச் சொல்லுதற்கு ஆங்கு இடமுண்டு. இக்கோட்பாடு அன்று இருந்தது போன்று இன்றும் எப்பொழுதுமே இருக்கும். ஆதலால் அவசியம் ஏற்படுகிற இடத்துக் கொல்ல மனிதன் துணியவேண்டும்.

# இராமகிருஷ்ணரின் பெருமை

(ஆசிரியர் மாணவர்கள் உரையாடல்)

கல்வி மனிதனுக்கு இன்றியமையாதது. உள்ளத்தைப் பண்படுத்துவதற்குக் கல்வி கற்ருக வேண்டும். உள்ளத்தைப் பண்படுத்தும் கல்வியே உண்மையான கல்வியாகும். தற்காலக் கல்வி பண்பாட்டை வளர்ப்பதில்லை. கல்வி கற்கக் கற்க அடக்கம், பணிவு, தூய்மை முதலிய பண்புகள் வளர்ந்து வரவேண்டும். கல்வியின் பயன் மனிதன் நிறைமனிதனுகவேண்டும்.

"கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்ருள் தொழாஅ ரெனின்"

என்பது வள்ளுவர் வாக்கு. நல்ல பண்பாளனுகை ஆகுமளவு அடக்கமும், பணிவும் ஏற்படுகின்றன.

**ஆசிரியர்:** குழந்தைகளே! நீங்கள் அடக்கம், பணிவு, தூய்மை, பக்தி முதலிய பண்புகளை எப்படிக் கற்றுக்கொள்வீர்கள்?

**மாணுக்கன் 1:** ஐயா, அப்பண்புகளை நூல்களில் படித்திருக்கிரேம். ஆனல் அப்பண்புகளை எப்படிப் பெறுவது என்பது எங்களுக்குத் தெரியவில்லை. அவைகள் உயரிய பண்புகள் என்ருல் நாங்கள் எப்படி அவைகளைக் கற்றுக்கொள்ள முடியும்? தாங்கள் தயைகூர்ந்து அவைகளை விளக்குதல் வேண்டும்.

**ஆசிரியர்:** குழந்தைகளே, நூல்களிலிருந்து அவைகளை நீங்கள் கற்றுக்கொள்ள முடியாது. அப்பண்புகளை வாழ்ந்து காட்டிய மகான்களிடமிருந்துதான் நீங்கள் கற்றுக்கொள்ளமுடியும். அப்பண்புகளே உருவெடுத்து வந்த ஒரு மகான் பத்தொன்பதாம் நூற்ருண்டின் முற்பகுதியில் வாழ்ந்தார். அவர் யார் என்பது உங்களுக்குத் தெரியுமா?

**மாணுக்கன் 2:** ஐயா, அவர் யார் என்பது எனக்குத் தெரியும். ஸ்ரீ விவேகானந்த சுவாமிகளை உருவாக்கிய மகான் ஸ்ரீஇராமகிருஷ்ணராவார்.

**ஆசிரியர்:** அவர் எங்குப் பிறந்தார், வாழ்வில் என்ன சாதித்தார் என்பது உங்களுக்குத் தெரியுமா?

**மாணுக்கன் 1:** வங்க நாட்டில் கல்கத்தாவுக்கு மேற்கே எண்பது மைல் தூரத்தில் ஹூக்ளி ஜில்லாவில் உள்ள கமார்ப்புகூர் என்னும் ஊர் தான் அவர் பிறந்த ஊராகும். இளமையிலேயே அக்காலக் கல்வியில் பயன் ஒன்றுமில்லை என்பதை அறிந்தார். எனவே பள்ளி செல்லுவதை நிறுத்தினுர். கல்கத்தாவில் தக்ஷிணேசுவரம் என்னும் இடத்தில் ராணி ராசமணி அம்மையார் அமைத்த காளிகோவிலில் தேவிஉபாசனையில் ஈடுபட்டார். தேவி தரிசனமும் விரைவில் பெற்ருர்.

**ஆசிரியர்:** குழந்தாய்! அவர் ஏன் பள்ளி செல்லுவதை நிறுத்தினுர்?

**மாணுக்கன் 2:** இராமகிருஷ்ணருக்கு அவருடைய பெற்ரேர்களாகிய க்ஷுதிராம் சட்டர்ஜியும், சந்திரமணிதேவியும் கதாதரன் என்று பெயர் வைத்திருந்தார்கள். கதாதரன் சிறு வயதிலேயே விவேகமுடைய சிறுவனுக இருந்தார். சில நாட்கள் பள்ளிசென்றதும் அக்காலக் கல்வி வயிற்றுப் பிழைப்புக்கான கல்வி என்பதை அறிந்தார். வயிற்றுப் பிழைப்புக்கான கல்வி தமக்கு வேண்டாமென்றும், இதயத்தை மலரச் செய்கின்ற கல்விதான் தமக்கு வேண்டுமென்றும் பெற்ரேர்களிடம் கூறிப் பள்ளி செல்ல மறுத்துவிட்டார். இதயத்தை மலரச் செய்யும் தெய்வவழிபாட்டை ஒட்டிய விளையாட்டுக்களில் தாமும் ஈடுபட்டுத் தம்மோடு சேர்ந்த சிறுவர்களையும் ஈடுபடுத்தித் தம்மிடத்தும் சிறுவர்களிடத்தும் மறைந்திருந்த மேலான இயல்பை வளர்த்தார்.

**ஆசிரியர்:** இராமகிருஷ்ணர் எத்தகைய கல்வி கற்ருர் என்பதை நான் உங்களுக்குச் சற்று விளக்கமாகவே கூறுகிறேன். கல்வியில் சிந்தித்தல், தெளிதல், செயல்படுத்துதல் ஆகிய மூன்று பகுதிகள் உண்டு. இம் மூன்று பகுதிகளையும் அவர் கடைப்பிடித்தார். கடவுள் சிந்தனையை வளர்த்தது அவருடைய கல்வியின் அடிப்படையாகும். பொருள் நாட்டத்தைவிடச் சிறந்தது அறிவு நாட்டம். அறிவு நாட்டத்திலும் மேலானது அருள் நாட்டம். அந்த அருள்நாட்டத்தை இராமகிருஷ்ணரின் சிந்தனை அவருடைய உள்ளத்தில் வளர்த்தது. பக்தி பரவசத்துடன் பஜனை பாடுவது அருள் நாட்டத்தின் விளைவாகும். அத்தகைய பஜனையில் தாமும்

மற்றவர்களும் ஈடுபட்டுப் பேரானந்தம் அடைந்தனர். சிந்தனையைத் தெளிவாக்குவதற்குத் தியானம் அவசியமாகிறது. கடவுள் சிந்தனையை வளர்க்கும் கடவுள் வடிவங்களைக் களிமண்ணில் அமைத்து அவ்வடிவங்களுக்கு எதிரே அமர்ந்து ஆழ்ந்து தியானத்தில் இருப்பது அவருக்குப் பொழுது போக்காக இருந்தது. தெய்வ சிந்தனை அவர் மனதில் தெளிவு ஆக ஆக அவருக்குச் சமாதிநிலை கூடிவந்தது. இங்ஙனம் அவர் பர வித்தையில் மூழ்கியிருந்தது ஒன்றே ஆயுட்கால மெல்லாம் அவர் கற்ற கல்வியாகும்.

**மாணுக்கன் 1:** ஐயா, ஸ்ரீ விவேகானந்தரை உருவாக்கியவர் இராமகிருஷ்ணர் என்பதை நாங்கள் அறிவோம். விவேகானந்தருக்கும் இராமகிருஷ்ணருக்கும் உள்ள இணக்கத்தை விளக்கமாக நாங்கள் தெரிந்துகொள்ள விரும்புகிறோம்.

**ஆசிரியர்:** குழந்தைகாள்! நான் அதை நன்கு விளக்குகிறேன். இராமகிருஷ்ணரும் விவேகானந்தரும் சிறந்த குருவும் சிஷ்யரும் ஆவார்கள். அவர்கள் துவக்கி வைத்துள்ள இயக்கம் இப்பொழுது இளஞ்செடியாக இருக்கிறது. இது மரமாகிப் பலருக்கு நிழலும் கனியும் கொடுக்க ஆயிரத்து ஐந்நூறு ஆண்டுகள் பிடிக்கும் என்று சுவாமி விவேகானந்தரே பகர்ந்துள்ளார். கடவுளைக் கண்டதுண்டா என்னும் கேள்வியை விவேகானந்தர் பல பெரியோர்களை அணுகிக்கேட்டார். அவ்வினவுக்கு ஏற்ற விடை யாரிடமிருந்தும் கிடைக்கவில்லை. கடைசியாக இராமகிருஷ்ணரிடமும் அக்கேள்வியுடன் வந்தார். "நான் கடவுளைக் காண்கின்றேன். உனக்கும் அவரை நான் காட்டுகின்றேன்" என்ற உறுதி மொழி இராமகிருஷ்ணரிடமிருந்து வந்தது. தாம் கூறியது போன்றே விவேகானந்தரின் ஞானக் கண்ணைத் திறந்து வைத்தார். நிர்விகற்ப சமாதி என்னும் பெருநிலையை விவேகானந்தருக்குத் தந்தார். ஞானச்செல்வத்தைத்திரட்டியவர் ஸ்ரீ இராமகிருஷ்ணர் என்றால் அந்த ஞானத்தை உலகமக்கள் அனைவர்க்கும் வழங்கியவர் ஸ்ரீ விவேகானந்தர் எனலாம். ஸ்ரீ இராமகிருஷ்ணரை ஆலயத்தின்கண் எழுந்தருளியுள்ள மூலமூர்த்தி என்றால் ஸ்ரீ விவேகானந்தரை ஆலயத்தின்கண்ணுள்ள உற்சவமூர்த்தி எனலாம். ஸ்ரீ ராமகிருஷ்ணர் வெளித்தோற்றத்துக்குப் பக்தராகத் தென்பட்டாலும் அவருடைய உள்ளம் நிறைஞானமுடையதாக இருந்தது. ஸ்ரீ விவேகானந்தர் வெளித்தோற்றத்துக்கு ஞானியாகத் தென்பட்டாலும் அவருடைய உள்ளத்தில் பக்தியின் மெல்லியல்பை வேண்டியவாறு காணலாம். ஸ்ரீ ராமகிருஷ்ணர் நவீனக் கல்வியைப் புறக்கணித்துக் கடவுள் வழிபாட்டின் மூலம் நிறைஞானம் பெற்றார். ஸ்ரீ விவேகானந்தர் நவீனக்கல்வியை முறையாகப் பயின்று கடவுள் ஞானத்தைப் பெற்றார். அவ்விருவர் வாழ்வின்மூலம் கல்விக்கு அடிப்படை புலனடக்கமும், மனம் ஒருமுகப்பாடும் என்ற உண்மை வெளியாகின்றது. எனவே மாணுக்கர்கள் அவ்விரு பண்புகளையும் அவசியம் பெற்றாக வேண்டும்.

**மாணுக்கன் 2:** புலனடக்கம் என்றால் என்ன என்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய வாழ்க்கை மூலம் எங்களுக்கு விளக்குங்கள்.

**ஆசிரியர்:** குழந்தைகாள்! புலனடக்கத்தை உங்களுக்கு நன்கு விளக்குகின்றேன்.

புலனடக்கம் பழகுவதற்கு இரண்டு உபாயங்கள் இருக்கின்றன. ஒன்று எதிர்மறை உபாயம்; மற்றது உடன்பாட்டு உபாயம். உடலையும் உள்ளத்தையும் பொறிபுலன்களையும் ஆதியோடு அந்தம் புறக்கணிப்பது புலனடக்கம் பழகுவதற்கு எதிர்மறை உபாயமாம். தென்படும் யாவற்றையும் இவையல்ல, இவையல்ல எனப் புறக்கணிப்பது இம்மார்க்கத்தின் போக்கு ஆகும். பன்னிரண்டு வருஷங்கள் மனிதன் தன்னைக் குகைக்குள் மறைத்து வைத்துக்கொண்டு புறவுலகோடு தொடர்வு வைக்காது இருந்து மனம் கெட்டுப் போகாமலிருப்பானாகில் எதிர்மறை உபாயத்தில் புலனடக்கம் பழகியவனாகின்றான்.

**மாணுக்கன் 1:** ஐயா! இது மிகவும் கடினமான முறையாகத் தெரிகிறது. இதை எல்லாராலும் கடைப் பிடிக்கமுடியாது. உடன்பாட்டு முறை ஒன்று உண்டு என்கிறீர்களே! அதை விளக்குங்கள்.

**ஆசிரியர்:** உடன்பாட்டு முறையில் புலனடக்கம் பழகுவது ஐம்பொறிகளையும் தெய்வீக விஷயங்களில் நன்கு பயன்படுத்துவதாகும். ஸ்ரீ இராமகிருஷ்ணர் உடன்பாட்டு முறையில் புலனடக்கம் பழகினர். 'தலையே நீ

வணங்காய்' என்று தலையை இறைவணக்கத் துக்கென்றே ஒப்படைத்தார். நீக்கமற எங்கும் நிறைந்துள்ள கடவுளின் விளையாட்டைக் 'கண் காள் காண்மின்களோ' என்று கண்களுக்குக் கட்டளை இட்டார். யாண்டும் பகவத் விஷயங் களையே 'செவிகாள் கேண்மின்களோ' என்று செவிகளுக்கு ஆணை இட்டார். அங்ஙனமே இறைவன் புகழை வாய் வாழ்த்தும்படியும் நெஞ்சு நினைக்கும்படியும் செய்தார். அவர் ஆணைக்கு உட்பட்டு ஐம்பொறிகளும் கடவுள் விஷயத்திலேயே மூழ்கி இருந்தன. பொறிகள் ஐந்தும் நமக்குப் பிரபஞ்ச வாழ்க்கைக்கு உதவு வது போன்று ஐம்பொறிகளும் பாரமார்த்திக வாழ்வுக்கு இராமகிருஷ்ணருக்குத் துணைபுரிந் தன. புலனடக்கம் பழக விரும்பும் ஒவ்வொரு வருக்கும் இராமகிருஷ்ணருடைய ஜீவிதம் நல்லதொரு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. மனதைத் தெய்வத்தின்பால் திருப்பிவிட்டால் அது தூயதாகிறது. தூய மனதுக்கு இந்திரி யங்கள் எல்லாம் திருப்பணி ஆற்றுகின்றன. சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தும் கடவுளைப் பற்றிய செய்தியையே உள் ளத்துக்குக் கொண்டு வருமாயின் அதுவே புலனடக்கமாகும் என்பதை ஸ்ரீ இராமகிருஷ் ணருடைய வாழ்வு விளக்குகிறது.

மாணுக்கன் 2: ஐயா! புலனடக்கத்தைப் பற்றி நாங்கள் நன்கு அறிந்துகொண்டோம்.

ஆசிரியர்: குழந்தைகளே! ஸ்ரீ இராம கிருஷ்ணருக்கு மணமாகி இருந்ததா? மணமாகி இருந்தால் அவருடைய வாழ்க்கைத் துணைவி யார்? அவரோடு அவர் எத்தகைய வாழ்வு நடாத்தினர்?

மாணுக்கன் 1: ஐயா, அவருடைய வாழ்வில் இது ஒரு முக்கியமான கேள்வியாகும். இக் காலத்து மக்கள் மணவாழ்க்கை வேறு, துறவு வாழ்க்கை வேறு என்று கருதி வருகிறுர்கள். அவர்களுக்கு இராமகிருஷ்ணருடைய வாழ்வு சிறந்ததொரு எடுத்துக்காட்டாக அமைகிறது. ஸ்ரீ இராமகிருஷ்ணர் மணம் முடித்துக்கொண்டு மனைவியோடு வாழ்ந்ததற்கிடையில் தூய துறவியாகவும் வாழ்ந்து வந்தார். பாரமார்த்திக வாழ்வுக்கு மணவாழ்க்கை இடையூருக அமை வது இல்லை என்பதை அவருடைய வாழ்க்கை எடுத்துக் காட்டுகின்றது. பெற்றோர்கள் அவ ருக்கு மணம் முடிக்க வேண்டும் என்று விரும்பி னர்கள். பெற்றோர்கள் விருப்பத்தை அறிந்த ஸ்ரீ இராமகிருஷ்ணர் 'எனக்காக ஒரு பெண் ஜெயராம்பாடியில் ராமச்சந்திரமுகர்ஜி என்ப வர் வீட்டில் வளர்ந்து வருகிறுள். அவளை மணம் பேசி முடியுங்கள்' என்றுர். விவாகத் தின்பொழுது இராமகிருஷ்ணர் இருபத்து நான்கு வயதுடையவராகவும் சாரதாதேவியார் ஐந்து வயது பூர்த்தியானவராகவும் இருந்தார். மணம் முடித்துக் கொண்டவர்கள் தாங் கள் குடும்பிகள் ஆகிவிட்டதாக அடிக்கடி எண் ணிக்கொள்கின்றுர்கள். ஆனல் விவாகம்செய்து கொண்ட சம்ஸ்காரம் இராமகிருஷ்ணருடைய உள்ளத்தில் எள்ளளவும் இடம் பெறவில்லை. விவாகம் முடிந்தபின் பன்னிரண்டு ஆண்டுகள் சாரதாதேவியார் பிறந்தகத்தில் பெற்றோருக்குப் பணிவிடை செய்வதிலும், இராமகிருஷ்ணர் தக்ஷிணேசுவரத்தில் தேவி வழிபாட்டிலும் ஈடு பட்டிருந்தனர். அதன் பிறகு அவர்கள் சேர்ந்து வாழ்ந்தபொழுது ஒருவரை ஒருவர் தெய்வ சொருபமாகப் பாராட்டியதே அவர்களுக்கிடை யில் ஏற்பட்ட இணக்கமாகும்.

ஆசிரியர்: நல்லது. இன்னும் அவருடைய இல்வாழ்வில் சிறப்பொன்றுள்ளது. தன் மனைவியைத் தெய்வமாக வைத்து வழிபட்டுள் ளார். அதையும் விளக்குகிறேன் கேளுங்கள். இராமகிருஷ்ணர் கடவுள் வழிபாட்டில் யாண் டும் மூழ்கி இருந்தார். ஸ்ரீ சாரதாதேவியார் அவருக்குப் பணிவிடை பண்ணுவதில் யாண் டும் ஈடுபட்டிருந்தார். பெண்ணொருத்தி தற் கொண்டவனைத் தெய்வமாகக் கருதினல் மட் டும் போதாது. ஆண்மகன் தன் துணைவியைத் தெய்வ சொருபமாகக் கருதுமளவுதான் பண் படுகிறுன் என்னும் கோட்பாட்டை இராம கிருஷ்ணர் தம் வாழ்வில் விளக்கிக் காட்டினர். சாரதாதேவியாரைப் பூஜாபீடத்தில் எழுந்தரு ளச் செய்து சாரதாதேவியாருக்குப் பூஜை செய்து அவரை ஞானத்தாயின் நிலைக்கு உயர்த்தினர். இராமகிருஷ்ணரும், சாரதா தேவியாரும் ஞானத் தம்பதிகளாக வாழ்ந்து உலகுக்கு ஞானத்தை எடுத்து வழங்கினர்கள். அவர்களுடைய வாழ்வில் காமத்துக்கோ, காசு ஆசைக்கோ சிறிதும் இடமில்லை. ஸ்ரீ இராம கிருஷ்ணரும் ஸ்ரீ சாரதா தேவியாரும் சரீர சம்

பந்தமான சந்தானத்தைப் பெறவில்லை. அதைப் பற்றிய எண்ணத்தையும் அவர்கள் அறவே ஒதுக்கி விட்டனர். சுவாமி விவேகானந்தர், சுவாமி பிரம்மானந்தர் போன்ற ஞானச் செல்வர்கள் தங்களுக்கு வேண்டுமென்று கடுந்தவம் புரிந்தனர். அப்படி அவர்கள் புரிந்த தவத்தின் வலிவு ஒரு ஞானக் குடும்பத்தை உலகுக்குத் தந்திருக்கிறது. இதுவே அவர்கள் வாழ்ந்த இல்வாழ்க்கையின் மகிமையாகும்.

**மாணுக்கன் 1:** ஐயா, அவருடைய ஞானக் குடும்பத்தோடு உலகத்தவர்களுக்கும் தொடர்பு உண்டு என்று சொல்லிக்கொள்வதில் பெருமைப்படுகின்றோம்.

**ஆசிரியர்:** குழந்தைகாள்! இராமகிருஷ்ணரைப்பற்றி இதுவரையிலும் ஆராய்ந்தோம். இன்னும் அவரைப்பற்றி உங்களுக்கு ஏதாவது தெரியுமா?

**மாணுக்கன் 2:** ஐயா, அவரைப்பற்றி எவ்வளவு வேண்டுமென்ருலும் சொல்லிக்கொண்டே போகலாம். அதற்கு முடிவே இல்லை. உலகுக்கு வேண்டிய இன்னும் சில விஷயங்களை அவர் வாழ்விலிருந்து எடுத்துச் சொல்லுகிறேன். அவர் ஒரு சமூகச் சீர்திருத்தக்காரர். இராமகிருஷ்ணருக்கு உபநயனம் என்னும் வைதிகச் சடங்கு நிகழ்ந்தபொழுது தனம் என்னும் கீழ்க்குல மாதுவிடம் அவர் பிக்ஷை ஏற்ருர். அச்செயலுக்கு அவர் சமூகத்தினர் எதிர்ப்புத் தெரிவித்தபொழுது "நான் சத்தியத்திலிருந்து பிறழமாட்டேன். தனம் என்பவள் மிகவும் நல்லவள்" என்று கூறி அச்செயலைச் செய்து முடித்தார். இது அவர் செய்த முதல் சமுதாயச் சீர்திருத்தமாகும். தீண்டாமை என்னும் நோய் நம் சமுதாயத்தைப் பிடித்த பெரும் நோய் ஆகும். தீண்டாமை என்னும் நோய் அஞ்ஞானத்தில் பிறந்ததாகும். இராமகிருஷ்ணர் தம் செயலின்மூலம் அதை அறவே அகற்றினுர். நள்ளிரவில் சேரிக்குச் சென்று அங்கிருந்த குப்பை கூளங்களை எல்லாம் கூட்டும்பொழுது "தாயே, உலகிலுள்ள எல்லா உயிர்களும் உன் குழந்தைகள். அனைவரும் உனக்குச் சமம். எல்லா உயிர்களையும் நேசிக்கும் மனப்பான்மை எனக்கு வேண்டும். நான் உயர்ந்த குலத்தில் பிறந்தவன் என்ற ஆணவம் இருக்கலாகாது. உன் குழந்தைகளில் ஒரு சிலர் புறவுலகில் போட்டிருக்கும் அழுக்கைத் துடைத்து நான் சுத்தம் செய்கிறேன். அச்செயலை உன் ஆராதனையாக ஏற்றுக்கொள்" என்று பிரார்த்தனை செய்தார். எல்லாரிடத்திலும் நலத்தையே காணும் தூயமனப்பான்மை இராமகிருஷ்ணரிடம் இருந்தது. கிரீஷ் சந்திரர் என்பவர் பஞ்சமகாபாதகங்களையும் செய்தவர். சொன்னசொல் தவறுவதில்லை என்ற ஒரு நற்குணம் மட்டும் அவரிடமிருந்தது. அந்த நற்குணத்தைக் கொண்டு அவரைப் பெருநிலைக்குக்கொண்டு வந்து விட்டார். அங்ஙனம் தம்மைத் திருத்துவதன் மூலம் சமுதாயத்தைத் திருத்தி அமைத்த சீர்திருத்தக்காரராக இராமகிருஷ்ணர் திகழ்ந்தார்.

**ஆசிரியர்:** குழந்தைகளே! இன்றைக்குச் சோம்பேறிகள் கூட்டம் நாட்டில் பெருகிக் கொண்டு வருகிறது. உழைப்பதற்கு யாரும் மகிழ்ச்சி அடைவதில்லை. உழைப்பில் உயர்வு தாழ்வு பாராட்டுகிருர்கள். நீங்கள் இத்தகைய கூட்டத்தோடு சேரக்கூடாது. நீங்கள் என்ன செய்யவேண்டும் தெரியுமா?

**மாணுக்கர்கள்:** ஐயா, நாங்கள் நன்மாணுக்கர்களாவோம். குருபக்தியில் எங்கள் முன்னேர்களுக்கு நாங்கள் பின் வாங்கமாட்டோம். நீங்கள் என்ன செய்யும்படி கூறுகின்றீர்களோ அதைச் சிரத்தையோடு செய்ய நாங்கள் ஆயத்தமாக இருக்கின்ருேம். எங்கள் வாழ்வில் முன்னேறுவதற்கு உரிய செயல் எதுவானுலும் நாங்கள் செய்ய ஆயத்தமாயிருக்கின்ருேம். ஸ்ரீ ராமகிருஷ்ணர் எத்தொழில் செய்தார்? எப்படி முன்னேறினுர்? என்பது எங்களுக்குத் தெரிந்தால் நாங்களும் அவ்வழியைப் பின்பற்றி முன்னேற்றம் அடைவோம்.

**ஆசிரியர்:** குழந்தைகாள்! வாழ்க்கையில் தற்செயலாய் வந்தமையும் செயலை மேற்கொள்ளுதல் வேண்டும். விருப்பு வெறுப்பற்ற நிலையில் அச்செயலை இறைபணியாகச் செய்யும்பொழுது வாழ்க்கையில் எல்லா நலன்களும் வந்தமைகின்றன. ஸ்ரீ ராமகிருஷ்ணர் புரோகிதத் தொழில் மேற்கொண்டார். அத்தொழிலை அவர் தேடிச் செல்லவில்லை. அவருக்குத் தானுக அது வந்தமைந்தது. கடவுள் வழிபாட்டையும், லௌகிகச் சடங்குகளையும் ஒருவர் பொருட்டு மற்ருெருவர் செய்தால் அது புரோகிதம் என்

னும் பெயர் பெறுகிறது. தொழில் தன்னளவில் கெட்டதும் அன்று நல்லதும் அன்று. எத்தகைய எண்ணத்துடன் தொழில் செய்யப்படுகிறதோ அதற்கேற்ப அது மேலானது அல்லது கீழானது ஆகிறது. உயர்ந்த தெய்வீக எண்ணத்தோடு செய்யப்படும் செயல் தேவாராதனை ஆகின்றது. கீழான எண்ணத்துடன் செய்யப்படும் செயல் தீவினை ஆகின்றது.

பணத்துக்காகவும் பொருளுக்காகவும்கடவுள் வழிபாடு செய்யும் புரோகிதன் கீழோனாகின்றான். தக்ஷிணேசுவர ஆலயத்தில் காளிகா தேவிக்குப் பூஜை செய்யும் தொழில் ஸ்ரீ ராம கிருஷ்ணரைத் தேடிவந்தது. அக்கோயிலை அமைத்தவர் ராணி ராசமணி அம்மையார் ஆவார். அவ் அம்மையாருடைய மருமகன் மதுரநாதர் ஆவார். ஸ்ரீராமகிருஷ்ணர் வீடுகளில் செய்த பூஜையை மதுரநாதர் கவனித்துப் பார்த்தார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் செய்த பூஜை அவருடைய உள்ளத்தைக் கவருவதாக இருந்தது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் பூஜையில் ஈடுபடும் பொழுது அக்கம்பக்கத்தில் இருப்பவர்களைப் பற்றி நினைக்கமாட்டார். அவர் முழுமனதும் வழிபாட்டிலேயே ஈடுபட்டிருக்கும். தட்சிணை பெறுவதைப்பற்றிய எண்ணமே அவருக்கு இல்லை. அவர் செய்த ஆராதனையே அனைத்தும் ஆயிற்று. அதன் மூலம் அவர் அடைந்த ஆனந்தமும் ஆர்வமும் அளவுகடந்தது. பூஜை என்றால் இப்படி அல்லவோ இருக்கவேண்டும் என்று அதைப்பார்த்தவர்கள் பகர்ந்தனர். கைம்மாறு கருதாது அவர் செய்த கடவுள் வழிபாடு அவருடைய உள்ளத்தில் பக்தி பெருக்கை உண்டாக்கியது. அப் பூஜையைப் பார்த்தவர்கள் உள்ளத்திலும் பக்தி வளர்ந்தது. மதுரநாதர் காளிகாபூஜையை ஏற்றுக்கொள்ளும்படி ஸ்ரீராமகிருஷ்ணரை வேண்டிக்கொண்டார். அப்பொழுது அத்தொழிலுக்கு மாதம் ஏழு ரூபாய் சம்பளம் தரப்பட்டது. ராமகிருஷ்ணர் "சம்பளம் வாங்கமாட்டேன்; சம்பளப் பட்டியலிலும் கையெழுத்து இடமாட்டேன்; சம்பளம் வாங்கினால் என்னுடைய ஸ்வாதீனம் போய்விடும்" என்று முதல் நிபந்தனை விதித்தார். ஆலயத்திலுள்ள ஆபரணங்களுக்குப் பொறுப்பாளியாக நான் இருக்கமாட்டேன்; ஆபரணங்களைப் பற்றி நினைத்தால் அது என் பக்திக்கு இடைஞ்சலாக இருக்கும்; இது அவர் எழுப்பிய இரண்டாவது ஆக்ஷேபனையாகும். மதுரநாதர் அவ்விரண்டு நிபந்தனைகளையும் தாம் நிறைவேற்றி வைப்பதாக ஒத்துக்கொண்டார். அதன் பிறகே ஸ்ரீ ராமகிருஷ்ணர் பூஜையை ஏற்றுக்கொண்டார். இன்றைய உலகப்பற்றுடைய அர்ச்சகர்கள் பொருள் சம்பாதிப்பிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கின்றனர். பரமஹம்சரும் அர்ச்சகத் தொழிலின் மூலம் தம்மிடத்தும் வழிபாட்டுக்கு வந்தவர்களிடத்தும் பக்தியைப் பெருக்குவதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தார். அங்ஙனம் அவர் இயற்றிய வழிபாட்டின் மூலம் அவர் அம்பிகையின் அருளுக்குப் பாத்திரமானார். பொருளைப்பற்றி நினையாதிருந்த அவருக்குத் தேவையானவைகளெல்லாம் அவரைத் தேடி வந்தன. ஸ்ரீ ராமகிருஷ்ணர் செய்த வழிபாடு தனி மனிதனுக்கும் சமூகத்துக்கும் பெரும் நலன் விளைவிப்பதாக விருந்தது. அப்படி நீங்கள் எத்தொழிலைச் செய்தாலும் அது உங்களுக்கும் சமூகத்துக்கும் பெரும் நலன் விளைவிப்பதாக இருக்கவேண்டும். இதை யாண்டும் நீங்கள் கருத்தில் வைத்துக் கொள்ளுங்கள்.

**மாணவர்கள்:** ஐயா! வாழ்க்கையில் நாங்கள் என்ன செய்யவேண்டும் என்பதை இன்று அறிந்து கொண்டோம். தானாகவே வந்து அமைகின்ற கடமையைப் பக்தியோடும் சிரத்தையோடும் நாங்கள் செய்வோம். ஸ்ரீ ராம கிருஷ்ணர் செய்ததைப் போன்று நாங்களும் முறையாகக் கர்மம்புரிந்து முன்னேற்றம் அடைவோம். இராமகிருஷ்ணர் மூலம் எங்களுக்கு நீங்கள் வழிகாட்டித் தந்துவிட்டீர்கள்.

**ஆசிரியர்:** இராமகிருஷ்ணர் தம்மிடம் வந்தவர்கள் எல்லார்க்கும் "காமமும், காசு ஆசையும் தான் எல்லாக் கேடுகளுக்கும் காரணம். அவற்றை ஒழித்துவிட்டால் வாழ்க்கையில் எல்லாச் சிறப்புக்களும் வருகின்றன" என்று உபதேசம் செய்தார். அவர் தாம் செய்த உபதேசப்படி அவரே வாழ்ந்து காட்டினார். இன்றைய உலகத்துக்கு அவர் உபதேசம் மிகவும் வேண்டப்படுவதாகிறது. குழந்தைகளே! நீங்களும் அவர் உபதேசத்தை வாழ்க்கையில் கடைப்பிடித்து எல்லா மேன்மைகளும் அடைவீர்களாக!

---

# சுவாமி துரியானந்தர் ஜீவிதம்

(60ஆம் பக்கத் தொடர்ச்சி)

**மேல்நாடுகளில் பணி**

சுவாமி விவேகானந்தர் அமெரிக்காவில் நடந்த சர்வமத மகாசபைக்குச் சென்றிருந்தார். அச்சபையில் உரையாற்றிய பின் அவர் புகழ் உலகெங்கும் பரவியது. அமெரிக்க நாட்டு மக்களுக்கு வேதாந்த தத்துவங்களைச் சுவாமி விவேகானந்தர் எடுத்து விளக்கினர். ஆங்கு அரும் பணி செய்துவிட்டு 1897ஆம் ஆண்டு இந்தியா திரும்பினர். அமெரிக்காவிலிருந்து கொண்டு வந்த பணத்தை வைத்துக்கொண்டு இந்தியாவில் ராமகிருஷ்ண மடத்துக்குப் புதிய கட்டடங்கள் கட்டத் தீர்மானம் செய்தார். புதிய கட்டடங்களுக்காகக் கல்கத்தாவில் பேலூர் என்னும் இடத்தில் நிலமும் வாங்கினர். தம் சகோதர சிஷ்யர்களைக்கொண்டு மக்களுக்குப் பணிவிடை செய்யும் திட்டத்தை உருவாக்கினர். ஆத்மீக அடிப்படையில் மக்களுக்குப் பணிவிடை செய்ய வேண்டும் என்பது சுவாமி விவேகானந்தருடைய கருத்தாகும். புதிதாக உருவான கட்டடத்தில் அமர்ந்து சுவாமி துரியானந்தர் ஸம்ஸ்கிருத வகுப்பும், வேதாந்த வகுப்பும் நடத்தினர்.

1899ஆம் ஆண்டு சுவாமி விவேகானந்தர் மீண்டும் மேல்நாடு போகவேண்டிய திட்டம் உருவாகியது. இம்முறை தம்மோடு சுவாமி துரியானந்தரையும் அழைத்துச் செல்வதாகத் தீர்மானம் செய்தார். முதல் முறை மேல்நாட்டில் இருந்து திரும்பும்பொழுது "நான் மறுமுறை மேல்நாட்டுக்கு வரும்பொழுது வேதாந்தத்தைச் செயல்முறையில் காட்டித்தருகின்ற சுவாமிகளை என்னுடன் அழைத்து வந்து உங்களிடம் சேர்ப்பேன்" என்று கூறிவந்தார். சுவாமி துரியானந்தரையே மனதில் வைத்து அங்ஙனம் கூறினர். ஆகவே சுவாமி துரியானந்தரைத் தம்முடன் மேல்நாட்டுக்கு வரும்படி அழைத்தார். முதலில் சுவாமி துரியானந்தர் இணங்கவில்லை. வைதீகமுறையில் தவத்தில் ஈடுபட்டிருக்க விரும்புவதாகக் கூறினர். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய பணிக்குத் தாங்களும் உதவியாக இருக்கக்கூடாதா? என்று சுவாமி விவேகானந்தர் கேட்டார். சுவாமி விவேகானந்தருடைய மனநிலையை அறிந்ததும் சுவாமி துரியானந்தர் அவருடன் மேல்நாடு செல்ல இசைந்தார். சுவாமி விவேகானந்தருடன் அவருடைய ஆங்கிலச் சிஷ்யையான சகோதரி நிவேதிதையும் மேல்நாடு செல்லத் தீர்மானித்தார். அனைவரும் அன்னை ஸ்ரீ சாரதாதேவியாரிடம் ஆசிர்வாதம் வாங்கச் சென்றனர். ஸ்ரீ சாரதா தேவியார் அவர்களுக்கு நல்ல விருந்து வைத்துத் தம் ஆசிர்வாதத்துடன் அவர்களை மேல் நாடுகளுக்கு அனுப்பிவைத்தார். மூவரும் 1899 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 20ஆம் தேதி கப்பல் ஏறினர். கல்கத்தாவிலிருந்து புறப்பட்ட கப்பல் சென்னை துறைமுகத்தில் முதலாவதாகத் தங்கியது. சுவாமிகள் இருவர்களையும் பார்ப்பதற்கு ஆயிரக்கணக்கான மக்கள் சுவாமி இராமகிருஷ்ணனந்தருடன் துறைமுகத்துக்கு வந்தார்கள். சுவாமி விவேகானந்தர் அன்போடு அக் கூட்டத்தாருடன் உரையாடினர். கப்பலில் போய்க் கொண்டிருந்தபொழுது சுவாமி துரியானந்தர் மேல்நாட்டுப் பழக்கவழக்கங்களைத் தமக்குச் சொல்ல வேண்டுமென்று சகோதரி நிவேதிதையிடம் கேட்டுக்கொண்டார். சகோதரி நிவேதிதை தம்மிடமுள்ள பேனகத்தி ஒன்றை எடுத்துக் கத்தியின் கூர் முனை தம் கையில் இருக்கும்படி பிடித்துக்கொண்டு பிடிப் பகுதியைச் சுவாமி துரியானந்தரிடம் நீட்டினர். "சுவாமிகளே, மேல்நாட்டவர்களுக்கு நீங்கள் எதைக் கொடுப்பதாக இருந்தாலும் அதிலுள்ள துன்பத்தையும் அசௌகரியத்தையும் உங்கள் பகுதியாக ஏற்றுக் கொண்டு, சுகத்தையும் சௌகரியத்தையும் அவர்களுக்குரியதாக்குங்கள். இதுதான் மேல்நாட்டுப் பண்பு" என்றார்.

இங்கிலாந்தில் சில இடங்களைப் பார்த்தான பிறகு சகோதரி நிவேதிதையை இலண்டனில் தங்கச் செய்து விட்டுச் சுவாமிகள் இருவரும் அமெரிக்காவிலுள்ள நியூயார்க்குக்குச் சென்றார்கள். பத்து நாட்கள் கடல் பிரயாணம் செய்தார்கள். சுவாமி விவேகானந்தருடன் சென்ற அனைவருக்கும் அப்பத்து நாட்களும் வாழ்க்கையில் மறக்க முடியாத புனித நாட்களாக இருந்தன. கீதைபாராயணம் பண்ணுவதும், கீதைக்கு

விளக்கங்கள் சொல்லுவதும் ஒவ்வொரு நாள் காலையிலும் நிகழ்ந்து வந்தன. ஸம்ஸ்கிருதத்தில் சுலோகங்கள் சொல்லுவதும் ஸம்ஸ்கிருதத்தி லுள்ள கதைகளை ஆங்கிலத்தில் சுவாமி விவே கானந்தர் மொழி பெயர்ப்பதும் அப்பத்து நாட் களும் பேரானந்தத்தை ஊட்டி வந்தன. நியூ யார்க்குச் சென்றதும் ஓர் அமைதியான இடம் சுவாமிகள் இருவருக்கும் அமைத்துத் தரப் பட்டது. இயற்கை எழிலும், இயற்கை அமை தியும் அங்கிருப்பவர்களுடைய உள்ளத்தை உயர்நிலைக்கு எடுத்துச் செல்வதாக இருந்தன. சுவாமி துரியானந்தருக்கு அந்தச் சூழ்நிலை மிக வும் பிடித்தமாக இருந்தது. சில வாரங்கள் சுவாமிகள் இருவரும் அவ்விடத்தில் தங்கி இருந்தனர். சுவாமிகள் இருவரும் தங்கள் போக்கில் மக்களைக் கவர்ந்து இழுத்தனர். பொருள் நிறைந்த ஸம்பாஷணை மூலமாகவும், ஆத்மீகக் கருத்துக்களைத் தெள்ளிய முறையில் எடுத்து விளக்குவதன் மூலமாகவும் சுவாமி விவேகானந்தர் தம்பால் மக்களைக் கவர்ந்து இழுத்தார். சுவாமி துரியானந்தர் சாந்தம், அமைதி, அடக்கம், பற்றின்மை முதலிய உயர் குணங்களால் மக்களைத் தம்பால் கவர்ந்து இழுத்தார். சுவாமி துரியானந்தர் தம்மை அணு கினவர்களிடம் பேரன்பு காட்டினர். அவரிடம் வேதாந்த பாடம் கேட்டவர்கள் மேலும் அவரி டம் கேட்கவேண்டும் என்று விரும்பினர். நியூயார்க்குக்கு நாற்பது மைலுக்கு அப்பா லுள்ள ஓர் இடத்தில் சுவாமி துரியானந்தர் குழந்தைகளுக்காக வகுப்பு ஆரம்பித்தார். இந்திய இதிகாசங்களிலிருந்து குழந்தைகளுக் குக் கதைகள் கூறினர். நியூயார்க்கிலிருந்த விவேகானந்தரின்சங்கத்தில்முதியோர்களுக்குச் சொற்பொழிவுகள்செய்தார். இந்தியாவிலிருந்து புதிதாக சுவாமி ஒருவர் வந்திருக்கிறார் என்ற செய்தி நியூயார்க்கு முழுவதும் பரவியது. ஆத் மீக வாழ்வே உருவெடுத்த தியானமூர்த்தியாக சுவாமி விளங்குகிறார் என்று மக்கள் பேசிக் கொண்டனர். பிரம்மச்சாரி குருதாஸ் துரியா னந்த சுவாமிகளால் மிகவும் கவரப்பட்டார். அவர் இராமகிருஷ்ண சங்கத்தில் சேர்ந்து பின் னர் சுவாமி அதுலானந்தர் என்னும் பேர்பெற் றார். "எங்களுக்கு டாம்பீகம் வேண்டியதில்லை. எளிய வாழ்வும், பரநாட்டமும் உள்ள சுவாமி துரியானந்தர் போன்றவர்கள்தாம் எங்களுக் குத் தேவை" என்று சுவாமி அதுலானந்தர் எழுதியிருக்கிறார். சுவாமி துரியானந்தரிடம் வேதாந்த பாடம் கேட்டவருடைய உள்ளத்தில் இந்தியப் பண்புகள் ஆகிய எளிமை, தியாகம், ஆன்மீகம் முதலியன ஆழப்பதிந்தன. வேதாந்த பாடம் கேட்டவர்களுடைய அறிவும் அன்பும் விரிவடையும்படி சுவாமி துரியானந்தர் பாடம் புகட்டினர். அவர் பாடம் புகட்டும்பொழுது மற் றவற்றை எல்லாம் அடியோடு மறந்து விட்டு எடுத்துக்கொண்டவிஷயமயமாய் ஆகிவிடுவார். அவர் உள்ளம் யாண்டும் தெய்வச் சிந்தனையில் மூழ்கி இருந்தது. தெய்வீகமான விஷயங்கள் அவர் வாயிலிருந்து தங்குதடையின்றி வந்து கொண்டே இருந்தன. சுவாமி துரியானந்தர் மேனாட்டில் தங்கியிருந்தபொழுது மேனாட்டு நாகரிக மோகத்தில் அகப்பட்டுக் கொள்ளாது இருந்தார். மேனாட்டு மக்களிடம் நெருங்கிப் பழகினர். அன்பினால் அவர்களுடைய உள்ளத் தைத் தம் வசப்படுத்தினர். வேதாந்த வகுப்பு கள் பெரியவர்களுக்கு நடாத்துவதும் சிறியவர் களுக்குக் கதைகள் கூறுவதும் ஆகிய பணி களைச் செய்து வந்தார். அவர் புகட்டியதைவிட வாழ்ந்து காட்டியதே மக்களை அவர்பால் கவர்ந் தது. மனிதன் பற்றற்று எப்படி வாழவேண் டும் என்பதைச் சுவாமி துரியானந்தர் மேனாட்ட வர்களுக்குக் காட்டித் தந்தார். மேனாட்டவரு டைய மனப்பான்மையை மாற்றியமைத்தார். ஆன்மீகம் எத்தகைய சக்தி வாய்ந்தது என் பதை அவர்களுக்குக் காட்டித்தந்தார். அமைதி, சாந்தம் ஆகிய பண்புகள் ஆத்மீக வாழ்வி லிருந்து உருவாகின்றன என்பதை அவர் களுக்குத் தம் வாழ்வின் மூலம் புகட்டினர். கலிபோர்னியாவில் சுவாமி விவேகானந்தர் சாந்தி ஆசிரமம் ஒன்றை அமைத்தார். அதற்குச் சுவாமி துரியானந்தரைத் தலைவராக நியமித் தார். சுவாமி துரியானந்தர் பொறுப்பு ஏற்க முதலில் மறுத்தார். சுவாமி விவேகானந்தர் "நீங்கள் அதற்குத் தலைவராக வேண்டுமென்பது அம்பிகையினுடைய திருவுள்ளம்" என்றார். அதற்குச் சுவாமி துரியானந்தர் சுவாமி விவேகா னந்தரிடம் உங்களுடைய திருவுள்ளம் அத்தகை யது என்றார். சுவாமி விவேகானந்தர் அதைக் கேட்டுச் சிரித்து விட்டார். கலிபோர்னியாவில்

அமைத்த ஆசிரமம் முற்றிலும் தெய்வத்தின் திட்டம் என்று சுவாமி விவேகானந்தர் உணர்ச்சியோடு பேசினர். சுவாமி துரியானந்தருடைய மனம் நிறைவுபெற்றது. சுவாமி விவேகானந்தருடைய விருப்பப்படி சான்பிரான்சிஸ்கோவில் சுவாமி துரியானந்தர் தம்வேலையைச் சீரியமுறையில் செய்துவந்தார். ஆனால் அவருக்கு நகரத்தில் தங்கியிருப்பது மனதுக்குப் பிடிக்காததாக இருந்தது. அடிக்கடி சாந்தி ஆசிரமம் சென்று வருவார். மலைப்பிரதேசத்தை நாடி ஆறு சாதகர்களுடன் சுவாமி துரியானந்தர் பிரயாணம் போனர். மலைக் காட்சிகள் அவர் மனதுக்கு மகிழ்வை ஊட்டின. மலையின் இருபுறங்களிலும் இருந்த பசுமையான காட்சியும் ஆங்கு வீசிய தென்றலும் அவருடைய மனதை மகிழ்வித்தன. சுவாமி துரியானந்தர் அவர்களோடு ஆனந்தமாகப் பேசிக்கொண்டு சென்ருர். அந்தப் பிரயாணத்தில் அவர்களுக்குப் பலவித அனுபவங்கள் ஏற்பட்டன. மேனுட்டு மக்களை நெருக்கடியான சூழ்நிலையில் வைத்து அவர்களுக்கு வாழ்க்கைப் பயிற்சி சுவாமி துரியானந்தர் தந்தார். அன்ருட வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களைப் பெறுவதற்கு வெகுசிரமம் எடுத்துக்கொள்ள வேண்டிய சூழ்நிலையில் ஆசிரம வாழ்க்கையைத் துவக்கினர். ஜலம் வேண்டுமென்ருல் அவர்கள் வசிக்குமிடத்திலிருந்து ஆறு மைல் நடந்துபோகவேண்டும். பண்டைக் கால ரிஷிகளின் ஆரண்ய வாழ்க்கை போன்று அவர்கள் வாழ்க்கை இருந்தது. நாள் ஏற ஏற அவர்கள் வாழ்க்கைக்கு வேண்டிய பொருட்கள் வந்து சேர்ந்துகொண்டே இருந்தன.

ஆசிரமக் கடமைகளைத் தங்களுக்குள் பங்கிட்டுக்கொண்டு தெய்வப் பணிவிடையாகக் கருதி செய்து வந்தார்கள். ரொட்டி தயாரிப்பது, உணவு தயாரிப்பது, பாத்திரங்கள் கழுவுவது முதலிய வேலைகளைப் பெண்டிர்கள் செய்து வந்தார்கள். விறகு உடைப்பது, நீர் இறைப்பது போன்ற கடினமான வேலைகளை ஆடவர்கள் செய்துவந்தார்கள். அதிகாலையில் ஐந்து மணிக்குச் சுவாமி துரியானந்தர் எழுந்திருப்பார். தம்முடைய இனிமையான குரலில் இசையோடு பாடல்கள் பாடி சிஷ்யர்களை எழுப்புவார். சுறுசுறுப்பாகச் சிஷ்யர்கள் எழுந்து நித்திய கடமைகளைச் செய்வார்கள். குளிர்காலமாக இருந்தால் தியான அறையின் நடுவில் அடுப்பு வைத்து அதில் நெருப்பு மூட்டி அதன் பின் தியானத்தில் அமர்வார்கள். சுமார் ஒருமணி நேரம் தியானத்தில் அமர்ந்திருப்பார்கள். பூஜை அறைக்குள் புகுவதற்கு முன்பு காலணிகளைக் கழட்டி வைத்துவிடுவார்கள். எல்லாரும் தியானத்தில் அமர்ந்தபின் சுவாமி துரியானந்தர் தியானத்தில் அமர்வார். இறைவனுடைய நாமத்தை அடங்கிய குரலில் உச்சரிப்பார். தியானத்தில் அமர்ந்திருப்பவர்களுடைய மனம் அடங்கித் தியானம் கைகூடும். தியானம் கலையும்பொழுது அடங்கிய குரலில் இறைவனுடைய நாமத்தை மீண்டும் துரியானந்த சுவாமிகள் உச்சரிப்பார்: தியானத்திற்குப்பின் அவரவர்கள் தங்களுக்குரிய கடமைகளில் ஈடுபடுவார்கள். காலை உணவின் பொழுது கருத்து நிறைந்த விஷயங்களைச் சுவாமி துரியானந்தர் சிஷ்யர்களுக்கிடையில் வெளியிடுவார். அவர் பேசுவதெல்லாம் ஆத்மீக விஷயமாகத்தான் இருக்கும். அப்பேச்சை யாவரும் கூர்ந்து கவனித்துக் கேட்பார்கள். காலை பத்து மணிக்குப் பகவத்கீதை வகுப்புத் துவங்கும். ஒரு மணிநேரம் கீதை வகுப்பு நடக்கும். அதைத் தொடர்ந்து ஒருமணி நேரம் தியானம் செய்வார்கள். நண்பகல் ஒருமணிக்கு உணவு எடுத்துக் கொள்வார்கள். இரவு உணவு ஏழு மணிக்கு எடுத்துக்கொள்வார்கள். இரவு எட்டு மணிக்கு மீண்டும் தியானம் துவங்கும். பத்து மணிக்கு யாவரும் உறங்கச் சென்றுவிடுவார்கள். சுவாமி துரியானந்தர் சிஷ்யர்களுடைய செயல்களையெல்லாம் கூர்ந்து கவனித்துவருவார். "அன்னை பராசக்தியைச் சிந்தனை செய்யுங்கள். உலக விஷயங்களை மறந்துவிடுங்கள். அன்னை பராசக்தியின் ஞாபகந்தான் உங்கள் உள்ளத்தில் இடம்பெற வேண்டும்" என்று அடிக்கடி சிஷ்யர்களுக்குக் கூறுவார். சாந்தி ஆசிரமத்தில் இருந்தபொழுது சுவாமி துரியானந்தரிடம் மறைந்திருந்த ஆத்மீகசக்தி வெளிப்பட்டுச் சிஷ்யர்கள் எல்லாரையும்ஆத்மீகத்துறையில் ஊக்குவித்துக்கொண்டிருந்தது. ஆசிரமக் கடமைகள் திட்டப்படி முறையாக நிகழ்ந்து வந்தன. ஆசிரம வாசிகள் யாவரும் கட்டுப்பாடுடனும் ஒழுங்குப்பாடுடனும் நடந்துகொண்டார்கள். காலம் தவருது யாவரும் தங்கள் கடமைகளைச்

செய்து வந்தார்கள். சுவாமி துரியானந்தர் ஆசிரமச் சட்டதிட்டங்கள் ஒன்றையும் ஏற்படுத்தவில்லை. ஆசிரமவாசிகள் தாமாகவே ஒழுங்குப்பாட்டுடன் நடந்துகொண்டார்கள். சுவாமி துரியானந்தரின் அன்பு ஒன்றே அனைவரையும் இயக்கி வந்தது.

அவருடைய அன்புக்கு அனைவரும் கட்டுப்பட்டுக் கிடந்தனர். ஆசிரமத்தில் ஒருவருக்கொருவர் பிணக்கு ஒன்றும் ஏற்படாதுவாழ்ந்து வந்தனர். அன்னை பராசக்திக்கு உரிய புதல்வர்களாக நாம் வாழ்ந்திருக்கத் தெரிந்துகொண்டால் எல்லாம் ஒழுங்காக நடைபெறும். தவறு எதுவும் நிகழ்ந்துவிடும் என்று நாம் பயப்படத் தேவையில்லை. அனைவரும் அன்னை பராசக்திக்குரிய புதல்வர்களாக நடந்துகொள்வீர்களாக. இங்ஙனம் தம் சிஷ்யர்களுக்குச் சுவாமி துரியானந்தர் அறவுரை செய்வார்கள். அன்னை பராசக்தியின் குழந்தைகளே, என்று தம் சிஷ்யர்களை அழைப்பார். அவர்களுடைய உள்ளத்தில் சதா ஆத்மீக உணர்வு நிலைபெற்றிருக்கும்படி அவர்களை ஊக்குவித்துக்கொண்டே இருப்பார். "சுவாமி துரியானந்தருடன் வசித்திருப்பதன்வாயிலாக என்உள்ளம் பரமானந்தத்தையும் என் அறிவு பிரகாசத்தையும் பெற்று வருகிறது" என்று குருதாஸ் என்னும் சிஷ்யர் பகர்ந்திருக்கிறார். சிஷ்யர்களை அறியாது சிஷ்யர்களுடைய ஆத்மீக முன்னேற்றத்திற்கு வேண்டிய உதவி சுவாமி துரியானந்தரிடமிருந்து வந்துகொண்டே இருந்தது. சிஷ்யர்கள் இயல்பு அறிந்து அவர்களுக்கேற்ற மார்க்கத்தைப் பின்பற்றுவதற்குப் பூர்ண உரிமை வழங்கினர். சிலர் மூன்று நாட்களுக்காவது தனிமையில் இருக்கவேண்டும் என்று விரும்பினர். அவர்களுக்கு அங்ஙனம் இருக்க அனுமதி தந்தார். சிலர் உபவாசமிருக்கவும், சிலர் இரவு முழுவதும் பிரார்த்தனை, தியானம் செய்யவும், சிலர் நாள் முழுவதும் மௌன விரதமிருக்கவும் விரும்பினர். அவர்களுடைய விருப்பப்படியே நடந்துகொள்ள சுவாமி துரியானந்தர் அனுமதித்தார். அம்முறைகளெல்லாம் அலைகின்ற மனதைச் சாந்தப்படுத்தப் பயன்படும் என்பதை அவர்களுக்கு எடுத்துப் புகட்டினர். சிலர் மனம் ஒடுங்கும்பொழுது சில சித்திகள் கைகூடின. அந்தச் சித்திகளை அவர்கள் வெளிப்படுத்திய பொழுது சுவாமி துரியானந்தர் அவர்களைத் திரஸ்கரித்தார். சித்திகளில் அகப்பட்டுக் கொண்டிருப்பது ஒரு பந்தப்பட்ட நிலையாகும். அதிலிருந்து விடுபடுவதே முக்தியாகும். நம் லட்சியம் முக்தி அடைவதேயொழிய பந்தத்தில் அகப்பட்டுக்கொள்வதன்று. எனவே சித்திகளிலிருந்து மனதை விலக்கி எடுத்துப் பரநாட்டத்தில் மனதைச் செலுத்தவேண்டுமென்று சுவாமி துரியானந்தர் தம் சிஷ்யர்களுக்கு அறிவுறுத்தி வந்தார்.

வாழ்க்கையை எப்படிப் புனிதப்படுத்த வேண்டும் என்பதைத் தம் சிஷ்யர்களுக்கு அவர் பகர்ந்துள்ளார். வாழ்வுக்கு உணவு இன்றியமையாதது. உணவு தயார்படுத்தும் சமையல் அறையைக் கோயிலாகக் கருதவேண்டும். அதைத் தூய்மையாகவும், புனிதமுடையதாகவும் வைத்துக்கொள்ளவேண்டும். உணவை நமக்காக நாம் சமைக்கவில்லை. தெய்வத்துக்குப் படைப்பதற்குரிய நைவேத்தியமாக உணவு சமைக்கின்றோம். உணவைத் தயாரிப்பவர்கள் இத்தகைய எண்ணத்தோடு தயாரிப்பார்களானல் அவ்வுணவு நைவேத்தியமாகிறது. உணவு தயாரிப்பவர்கள் எக்காரணத்தை முன்னிட்டும் சுவை பார்க்கக்கூடாது. உணவில் உப்புக் காரமிருக்கிறதா என்பதைச் சுவை பார்த்து அறிந்துகொள்ளக்கூடாது. அப்படிச் செய்தால் உணவைத் தெய்வத்துக்குத் தயாரித்தவர்களாகமாட்டோம். உணவைத் தயாரித்தபின் தெய்வத்துக்கு நைவேத்தியம் படைத்து விட்டுப் பிறகு அதைப் பிரசாதமாக அனைவருக்கும் வழங்கவேண்டும். ஸ்நானம் செய்து தூய உடை அணிந்துகொண்டுதான் சமையல் அறைக்குள் செல்லவேண்டும். இப்படி நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் தெய்வீக உணர்வோடு செய்து வருவோமேயானல் வெகு விரைவில் ஆத்மீக வளர்ச்சி அடைவோம். இங்ஙனம் துரியானந்த சுவாமிகள் தம் சிஷ்யர்களுக்கு உணவுச் சாலையில் நடந்துகொள்ள வேண்டியதைப் போதித்தார். வாழ்க்கையில் நாம் செய்யும் ஒவ்வொரு செய்கையும் தெய்வத்தோடு இணைக்கப்படுகிறபொழுதுதான் நம்மை முற்றும் தெய்வத்துக்கு அர்ப்பணம் செய்ய முடியும் என்று தம் சிஷ்யர்களுக்குத் தெளிவாக எடுத்து விளக்கினர். (தொடரும்)

# அனுமன்-7

(சுவாமி ஆத்மானந்தர்)

**சீதையைக் காணுதல்**

இலங்கை நகரெங்கும் தேடியும் சீதையைக் காணப்பெறாது தன்னையே அழித்துக்கொள்ளக் கருதிய அனுமனுக்கு அசோக வனம் தென்படுகிறது. மலர்கள் நிறைந்த அந்த வனத்திலும் பார்த்துவிடலாமென்று ஆவலோடு தாவிச் செல்லுகிறான். அனுமனுடைய ஆவலும் நம்பிக்கையும் வீண்போகவில்லை. சிறைகிடந்த சீதாதேவியைத் தன் கண்களால் காணும் பாக்கியம் அங்கே அனுமனுக்குக் கிட்டுகிறது. "கற்பாறைகளினிடையே தண்ணீர் அகப்படாது வாடும் அரிய சஞ்சீவி மூலிகையைப் போலவும், வெயிலிடை ஏற்றிவைத்த விளக்குப் போலவும், புலிக்கூட்டத்தின் நடுவே அகப்பட்ட பெண் மானைப் போலவும் கருநிற அரக்கியரிடையே சீதை காட்சியளிக்கின்றாள்" என்று கம்பன் சீதையின் நிலையை வர்ணிக்கின்றான்.

இராமன் பிரிவால் சீதை துயரடைந்தாள். "ஒரு சமயம் கீழே விழுகின்றாள்; பின்னர் விம்மி விம்மி அழுதுபுலம்புகின்றாள்; நெஞ்சம் வெதும்புகின்றாள்; உடனே அஞ்சி எழுகின்றாள்; ஏங்கி ஏங்கித் தவியாய்த் தவிக்கின்றாள்; சோர்ந்து நடுங்குகின்றாள்; துயரமிகுதியால் பெருமூச்சு விடுகின்றாள். ராமனை நினைந்து நினைந்து திக்கு நோக்கித் தொழுகின்றாள். ஓவென்று கதறிப் புலம்புகின்றாள். மேற்கொண்டு செய்வதறியாது அப்படியே செயலற்று இருக்கின்றாள்."

> விழுதல்,விம்முதல்,மெய்உற வெதும்புதல்,வெருவல்,
> எழுதல், ஏங்குதல், இரங்குதல், இராமனை எண்ணித்
> தொழுதல், சோருதல், துவங்குதல், துயர்
> உழந்து உயிர்த்தல்,
> அழுதல், அன்றி, மற்று அயல் ஒன்றும் செய்குவது
> அறியாள்.

ராமன் சீதைக்கு உயிர்போன்றவன்; சீதையும் ராமனுக்கு உயிர்போன்றவள். ஒருவர்மீது ஒருவர் காட்டுகின்ற இருவர் அன்பில் ஏற்றத்தாழ்வு என்பதனைக் காணவே முடியாது. அரண்மனையில் பிறந்து, அரண்மனையில் வளர்ந்து, அரண்மனையில் புகுந்தவள் சீதை. அரண்மனை வாழ்வினைத்தவிர வேறொன்றினையும் அறியாதுஇருந்தவள். அந்நிலையில்தான் நாடாளவேண்டிய ராமன் காடாளவேண்டிய சூழ்நிலை வடிவெடுக்கின்றது. நாடுதுறந்து காடு செல்ல முற்படுகிறான் ராமன். சிந்தனை சிறிதுமின்றி சீதையும் உடன் செல்ல முற்படுகின்றாள். அரசபோகத்தைத் துறத்தல் சீதைக்குத் துயராகத்தோன்றவில்லை. ராமனைப் பிரிதல்தான் அவளுக்குப் பெருந்துயரமாகத் தோன்றுகிறது. 'நின் பிரிவினும் சுடுமோ இப்பெருங்காடு' என்று ராமனோடு வனம் செல்ல முற்பட்டவள் சீதை. அந்தச் சீதைதான் இப்பொழுது ராமனைப் பிரிந்திருக்கின்றாள். பிரிவுத் துயரம் எத்தகைய வேதனையைத் தரும் என்பதை ஏட்டில் படித்திருக்கலாம் அல்லது பிறர் கூறக் கேட்டிருக்கலாம். ஆனால் இங்கு சீதை அசோக (சோகமற்ற) வனத்தில் சோகத்தின் திருவுருவாய்த் தென்படுகிறாள்.

> பிரிவு எனும் துயர்
> உருவு கொண்டால் அன்ன
> பிணியாள்.

சீதையின் கண்கள் உறக்கத்தைத் துறந்து விட்டன. உறக்கத்தைத் துறத்தல் எளிய செயலன்று. நம்மால் அந்தப் பெருநிலையினை எண்ணியும்கூடப் பார்க்கமுடியாது. அந்த மனநிலையைப் படம்பிடித்தலே மிக மிகக் கடினமானதாகும். ராமன் மீது வைத்த பேரன்பும், ராமனைப் பிரிந்த பெருந்துயரமும்சேர்ந்து சீதையின் உறக்கத்தைப் போக்கிவிட்டன. இமையா விழியினளாய் ராமனை எதிர்பார்த்து நிற்கின்றாள். சக்கரவர்த்திதிருக்குமாரனாகிய ராமன் வருவான் வருவான் என்ற துணிவுடன் திசைகளையெல்லாம் தன் கண்களினால் அளக்கின்றவளைப் போல் பார்க்கின்றாளாம்."

> சுருதி நாயகன், வரும் வரும் என்பது ஓர்
> துணிவால்
> கருதி, மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற
> கண்ணாள்.

இங்கு ஆண்டாளுடைய நினைவு நமக்கு வருகிறது. பக்தி மார்க்கத்தில் மதுரபாவனையைப் பின்பற்றிப் பிரேமை பக்தியின் உச்சநிலையை அடைந்தவள் ஆண்டாள். அரவணையில் துயில் கொள்ளும் அரங்கனையே மணக்க விரும்பியவள். கண்ணனை மணக்க விரும்பி அவள்

கொண்ட தெய்விக நினைவுகளும் கனவுகளும்தாம் எத்தனை எத்தனை ! ராமனைப் பிரிந்து சீதை அடைந்த துயரத்தினை அரங்கநாதனை அடையப் பெறாத ஆண்டாளும் அடைகின்றாள். கீழே வரும் திருப்பாடல் ஆண்டாளின் மன நிலையை நமக்குப் படம் பிடித்துக் காட்டுகின்றது.

என்பு உருகி இனவேல் நெடுங்கண்கள்
இமை பொருந்தாப் பலநாளும்
துன்பக் கடல்புக்கு வைகுந்தன் என்பது ஓர்
தோணி பெறாது உழல்கின்றேன்
அன்புடையாரைப் பிரிவுறும் நோய்
அது நீயும் அறிதி குயிலே!
பொன்புரை மேனிக் கருளக் கொடியுடைப்
புண்ணியனை வரக் கூவாய்

என்பது ஆண்டாள் திருமொழி. துயில் ஒழிதலும், கண்கள் இமை பொருந்தாமையும், துன்பக் கடலுள் உழல்தலும், அன்புடையார் இருவருக்கும் பொதுவாயிருக்கின்றன.

சோக வெள்ளத்திலே மூழ்கியிருந்த சீதையாம் அழகின் ஜோதியை, கண்ணீர்க் கடலிலே நீந்திய சீதையாம் அன்னத்தை, கருநிறத்து அரக்கியர் குழாத்திடையே விரி மழைக்குலம் கிழித்து ஒளிரும் மின்னலெனக் காணுகிறான் அனுமன். ராமன் சொன்ன லக்ஷணங்கள் அனைத்தும் ஒருங்கே பொருந்தியிருப்பதைக் காணுகிறான். இவள் சீதையே என்ற முடிவுக்கு வந்துவிடுகின்றான். கொடிய கள்வனாகிய இராவணன் ராமபிரானுடைய உயிரையல்லவா இங்கே ஒளித்து வைத்திருக்கின்றான் என்று எண்ணுகிறான்.

கள்ளவாள் அரக்கன் அக்கமலக் கண்ணனூர்
உள் உறை உயிரினை ஒவித்து வைத்தவா !

சீதையைச் சிறை வைத்த இந்தக் கொடிய செயலின் மூலம் இராவணன் மூவுலகுக்கும் பெருங்கேடு செய்தவனாகின்றான். பாற்கடலில் அரவணையில் பள்ளிகொண்டிருக்கும் அப் பரந்தாமனே இங்கு ராமனாக வந்து அவதரித்திருக்கிறான். செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் செல்வத்திருமகளாகிய ஸ்ரீ மகாலக்ஷ்மியே சீதையாக வந்து தோன்றியிருக்கின்றாள்.

மூவகை உலகையும் முறையின் நீக்கிய
பாவிதன் உயிர் கொள்வான் இழைத்த பண்பு
இதால்;
ஆவதே; அரவணைத் துயிலின் நீங்கியோ
தேவனே அவன்; இவள் கமலச் செல்வியே.

சீதாராமனை உள்ளபடி அறிந்துகொண்ட அனுமன் மனத்தகத்து எல்லையற்ற பேரானந்த வாரிதி பெருக்கெடுத்து ஓடுகின்றது. 'அறம் இன்னும் அழியவில்லை; நானும் அழிந்தொழிய மாட்டேன். தேடிவந்த சீதாதேவியைக் கண்டு கொண்டேன்' என்ற ஆனந்த மிகுதியினால் ஆடவும் பாடவும் ஓடவும் செய்கிறான்.

வீடினது அன்று அறன்; யானும் வீகலேன்;
தேடினென் கண்டனென்; தேவியே ! என—
ஆடினன்; பாடினன்; ஆண்டும் ஈண்டும் பாய்ந்து
ஓடினன்; உலாவினன்;—உவகைத் தேன்
[உண்டான்.

நெடுநாள் தேடியும் கிடைத்தற்கரிய ஒரு பொருள் கிடைத்து விட்டால் மனிதன் ஆனந்த பரவசனாகி ஆடவும் பாடவும் செய்கிறான். பரமனுக்காகப் பக்தர்கள் எத்துணையோ நெடுங்காலம் தவம் கிடக்கின்றனர். இறுதியில் பரமன் அருளுக்குப் பாத்திரராகின்றனர். பக்தி பெருகப்பெருக அவர்கள் மனத்தகத்துப் பரமானந்தமும் பெருகுகிறது. அதன் விளைவாக அடியார் பெருமக்கள் ஆடவும் பாடவும் செய்கின்றனர்.

ஆடுவதும் பாடுவதும் ஆனந்த மாகநின்னைத்
தேடுவதும் நின்னடியார் செய்கை பராபரமே

என்பது தாயுமானவர் திருவாக்கு. இந்த முறையில்தான் சீதையைக் கண்ட அனுமன் மனத்தகத்து ஆனந்த வெள்ளம் பெருக்கெடுத்துத் தத்திக் கரைபுரண்டோடுகின்றது.

பின்னர் அனுமன் சீதையை நோக்கி, "மாசுண்ட மணிபோன்று இருக்கின்றாள், தேசுண்ட திங்களைப் போன்று தேய்ந்துள்ளாள்; ஆனால் இவள் கற்புக்கும் காதலுக்கும் பங்கம் ஏற்படவில்லை. அறத்துக்கும் அழிவுண்டோ!" என்று வியக்கிறான்.

மாசுண்ட மணி அனாள், வயங்கு வெங் கதிர்த்
தேசுண்ட திங்களும் என்னத் தேய்ந்துளாள் ;
காசுண்ட கூந்தலாள் கற்பும், காதலும்
ஏசுண்டது இல்லையால்; அறத்துக்கு ஈறு
[உண்டோ?

சிறைகிடந்த சீதையின் தவக்கோலம் அனுமனைப் பெரிதும் கவர்கிறது. இது பரியந்தம் ராமன் பேரழகிலும் வீரசௌந்தரியத்திலும்

உள்ளத்தைப் பறிகொடுத்திருந்த அனுமன், இப்பொழுது சீதையின் ரூபலாவண்யத்தையும் நவமேன்மையையும் கண்டு வியப்படைகின்றான். ஐம்புலன்களையும் அடக்கிப் பஞ்சாக்கினி மத்தியில் நின்றுகொண்டு, உண்ணும் உணவையும் பருகும் நீரையும் துறந்து ஊனை வருத்தித் தவம் புரிவோருடைய தவம் சீதை புரியும் இந்த மனத்தவத்தோடு ஒப்பிடுதற்காகுமா? உலகத்தில் சீதை பிறந்ததனால், பெண் பிறப்பும், பெண்களுக்குரிய நாணம் முதலிய நற்குணங்களும் மிக்க சிறப்பை அடைந்தன. சீதையின் தவக்கோலத்தை, அவள் தன் கற்பினைத் காத்துவரும் திறத்தினைக் காணும் பாக்கியம் இராமனுக்குக் கிட்டவில்லையே" என்று பரிதவிக்கிறான்.

பேண நோற்றது மனைப் பிறவி, பெண்மைபோல்
நாண நோற்று உயர்ந்தது, நங்கை நோன்றலால்;
மாண நோற்று, ஈண்டு இவள் இருந்தவாறு எலாம்
காண நோற்றிலன், அவன் கமலக் கண்களால்!

இங்ஙனம் அனுமன் சீதாராமனின் மேன்மையினைச் சிந்தித்துக் கொண்டிருக்கும்போது அங்கே இராவணன் வருகிறான்.

பலமலைச் சிகரங்கள் திரண்டு ஒருங்கு வருவதுபோல் பத்துத்தலைகளையுடைய இராவணன் தேவமாதர் புடைசூழச் சீதை இருக்குமிடத்திற்கு வருகிறான். வந்தவன் இராவணன் என்பதை அறிந்து அனுமன் சீதைக்கு என்ன தீங்கு நேருமோ என்று பரிதபிக்கிறான். என்ன நடக்கப்போகிறது என்பதை அறிய விரும்பிய அனுமன் இன்னும் கீழே இறங்கி மரக்கிளையில் மறைந்திருந்து பார்க்கிறான். சீதாபிராட்டிக்கு எவ்விதத் தீங்கும் ஏற்படக்கூடாது என்பதற்காகச் சர்வரோகசஞ்சீவியாகிய ராம நாமத்தை உச்சரித்துக்கொண்டு இலைகளின் மறைவில் மறைந்திருந்து பார்க்கிறான்.

அப்பொழுது இலங்கை வேந்தன் சீதையை அணுகி "எனக்கு எப்போது நீ இன்னருள் புரிவது?" என்று இரங்கிக் கேட்கிறான். 'உன் கணவன் ராமன் ஒரு அற்ப மானுடன். அவனுடன் வாழ்வதும் ஒரு வாழ்வாகுமா? மூவுலகையும் ஆளுகின்ற என்னுடனல்லவா நீ வாழ வேண்டும். இலங்கேசுவரனாகிய நான் உன்னைக் காதலிக்கிறேன். நான் உன் அடிமை; என்னை நீ ஏற்றுக்கொள்வாயாக' என்று தலைமேல் கை கூப்பி வணங்குகிறான்; அவள் கால்களிலும் விழுந்து வணங்குகிறான். காமத்துக்கு வசப்பட்டவன் எவ்வளவு கீழ்மையடைகிறான் என்பதற்கு இராவணன் எடுத்துக்காட்டாவான்.

இராவணனின் தகாத வார்த்தைகளைக் கேட்ட சீதைக்குப் பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பியினைச் செவியிலே செலுத்துவது போன்றிருந்தது. கோபத்தால் கண்கள் சிவந்தன. உயிரையும் இலட்சியம் செய்யாத வீரபத்தினியாகிய சீதை, இலங்கேசுவரனை ஒரு துரும்பாக மதித்துக் கோபத்துடன் பேசமுற்படுகின்றாள். "நீ என் கணவன் வில்லாற்றலை அறிந்திருந்தும் பொருந்தாத வார்த்தைகளைப் பிதற்றுகின்றாய். அரசனாக இருந்தும் அருளும் அறமும் அற்ற அரக்கச் செயலைச் செய்யத் துணிந்தாய். பர்ணசாலை முன் வில்லேந்தி நின்ற இலக்குவனைப் போரில் வென்றாயா? இராம இலக்குவர் முன் போரில் எதிர் நிற்க இயலாத நீ என் காலில் விழுந்து கெஞ்சுகிறாய். உன் வீரம் என்ன வீரம்! என் கணவன் ராமன் அம்பால் நீயும் உன் குலம் முழுமையும் அழிவது நிச்சயம். ராமபாணத்திற்கு முன் நீ பெற்றுள்ள வரங்களும், வாழ்நாளும், வலிமை அழியப் போகின்றன.

பெற்றுடை வாளும் நாளும், பிறந்துடை உரனும், பின்னும்
மற்றுடை எவையும், தந்த மலர் அயன் முதலோர் வார்த்தை,
வில்தொடை இராமன் கோத்து விடுதலும், விலக்குண்டு, எல்லாம்
இற்று இடைந்து இறுதல் மெய்யே; விளக்கின்முன் இருள் உண்டாமோ?

சீதாபிராட்டியின் சொற்களைக் கேட்ட இராவணனுக்குப் பெருங்கோபம் வருகின்றது. கோபமும் பயமுறுத்தலும் சீதைபால் வைத்திருந்த ஆசை வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டன. சீதை தன் விருப்பத்துக்கு இணங்க இரண்டு மாதங்கள் தவணைதருகிறான். சீதையைக் காவல்புரியும் அரக்கியரிடம் எப்படியாவது சீதையை வசப்படுத்த வேண்டும், இல்லையேல் தண்டனைக்கு உள்ளாவீர்கள் என்று எச்சரித்துவிட்டுச் சென்றுவிட்டான். சீதையோடு பேசுதற்கு இதுதான் தக்க சமயம் என்று அனுமன் கருதுகிறான்.

# சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துக்கள்

( வித்துவான் ஆதி. பாலசுந்தரன் M. A. )

சங்க இலக்கியங்களில் ஒன்று பெரும்பாணாற்றுப்படை என்ற நூல். இந்நூலில் திருமால் பற்றிய செய்திகள் சொல்லப்படுகின்றன.

"காந்தள்அம் சிலம்பில் களிறுபடிந்தாங்கு
பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன்"

என்பன பெரும்பாணாற்றுப்படை அடிகள். [*371-373*] நீண்ட பூங்கொத்துக்கள் செறிந்த காந்தள் மலர்கள் பூத்துக் குலுங்கும்படியான மலையில் ஆண்யானை படுத்திருப்பதுபோல, திருமால் பாம்புப் படுக்கையில் துயில் கொண்டிருக்கிறார். இவ்வாறு அவர் அறிதுயில் கொள்ளும் தலம் திருவெஃகா என்னும் பதியாகும்.

அரவு அணை என்பது பாம்புப்படுக்கை. ஆதிசேஷனாகிய பாம்புப் படுக்கையில் துயில் கொள்ளும் திருமாலைப்பற்றிச் சங்க நூல்கள் கூறுகின்றன.

வேத காலங்களில் இருந்து—தொல்காப்பியர் முதலான அறிஞர்கள் காலத்திலிருந்து—நவீன கால இலக்கியங்கள்வரை திருமால் பற்றிய செய்திகள் சொல்லப்படுகின்றன. தெய்வங்களைப்பற்றிய சிந்தனை தனிப்பட்ட மனவளர்ச்சியால் ஏற்படுவதாகும். ஒரு காலத்தில் திருமால் பற்றி ஏற்பட்ட சிந்தனை காலந்தோறும் சிறிது மாறுபட்டும் நிலையாகவும் இருந்து வருகிறது.

அவ்வகையில் மேலே சொல்லப்பட்ட திருமால் பற்றிய பெரும்பாணாற்றுப்படை கூறும் செய்தியை ஒட்டியும், அச்சிந்தனையில் வளர்ந்து வந்துள்ள தொடர்பான சில செய்திகளைக் காண்போம்.

திருக்கோயில்களில் இறைவனுக்கு மூர்த்தங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இத்திரு உருவங்கள் மூன்று வகைப்படும். ஒன்று ஸ்தானகம் [நிற்பவை]; இரண்டாவது ஆசனம் [அமர்ந்திருப்பவை]; மூன்றாவது சயனம் [படுத்திருப்பவை] என்பன அம்மூன்று வடிவங்கள் ஆகும். திருமலை [திருப்பதி], அத்திகிரி [காஞ்சிபுரம்], திருநாவாய் [கேரளம்], பேலூர் முதலிய இடங்களில் விஷ்ணு மூர்த்தம் நின்ற கோலமாக அமைந்துள்ளது. ஹம்பி, ஸ்ரீரங்கப்பட்டணம் [மைசூர்], மகாபலிபுரம், சிங்கபுரம், ஸ்ரீரங்கம், திருவனந்தபுரம், பாதாமி முதலிய தலங்களில் கிடந்த திருக்கோலத்தில் விஷ்ணுமூர்த்தம் அமைந்துள்ளது. காஞ்சிபுரம் வைகுண்டப் பெருமாள் கோயில், மதுரை அழகர் கோயில், திருக்கோஷ்டியூர், திருநெல்வேலி முதலிய தலங்களில் திருமாலை இருந்த திருக்கோலத்தில் காணலாம்.

பொதுவான முறையில் இம்மூன்று வடிவங்களைச் சொன்னாலும், திருமாலாகியவிஷ்ணுவின் மூர்த்தங்களே இம்மூன்று வடிவங்கள் நிலையில் பெரும்பாலும் அமைந்திருக்கும். இம்மூன்று கோலங்களிலும் உள்ள விஷ்ணுவின் மூர்த்தங்கள் ஒவ்வொன்றும் யோகம், போகம், வீரம் என்ற மூன்று நிலைகளில் பாகுபாடு செய்யப்பட்டுள்ளன.

ஆன்மீகத்துறையில் ஈடுபட்டுள்ளவர்கள் யோக மூர்த்தத்தை வழிபாடு செய்வார்கள். உலகத்தில் இன்பமாக வாழ வேண்டும் என்று நினைக்கின்றவர்கள் போக உருவத்தை வழிபடுவார்கள். போர்த்துறையில் வல்லுநர் ஆக விரும்புகின்றவர்கள் வீர மூர்த்தத்தை வழிபடுவார்கள்.

தெய்வங்கள் கொடூர அம்சத்தைக் காட்டுவன எனவும், சாந்த அம்சத்தைக் காட்டுவன எனவும் இரண்டு வகைப்படும். அமைதியை விரும்புகிறவர்கள் சாந்த அம்ச மூர்த்தங்களை வழிபடுவார்கள். கொடுங்கருமங்களில் ஈடுபட விரும்புகின்றவர்கள் கொடூர அம்ச மூர்த்தத்தை வழிபடுவார்கள்.

திருமால் மூர்த்தங்களில் விஸ்வருபம், நரசிம்மம், வடபத்திரசாயி, பரசுராமர் இவர்களைச் சித்திரிக்கும் மூர்த்தங்கள் உக்கிரமானவை.

விஷ்ணுவின் பல அவதாரங்கள் தென் இந்தியாவில் பிரபலமாகச் சொல்லப்படுகின்றன அவதாரம், ஆவேசம், அம்சம் என மூன்று வகையாக அவதாரங்கள் சொல்லப்படும். தெய்வத்தின் முழுச் சக்தியுடன் உரு எடுப்பது அவதாரம். தற்காலிகமாகச் சக்தியை ஓர் உருவில் புகச் சொல்லுவது ஆவேசம். தெய்வத்தின் அம்சம் மிகச் சிறிய அளவு அமைந்திருப்பது அம்சம் ஆகும்.

"நீல்நிற உருவின் நெடியோன் கொப்பூழ்
நான்முகன் ஒருவன் பயந்த"

—[பெரும்பாணாற்றுப்படை 402-403] — நீல நிறத்தை உடைய நெடியோனுகிய திருமால் தனது உந்திக் கமலத்திலிருந்து நான்முகனுகிய படைப்புக் கடவுள் பிரம்மனைத் தோற்றுவித்த புராண மரபு இவ் அடிகளில் சொல்லப்படு கிறது.

பாண்டிய மன்னர்கள் புராண காலத்தில் நடந்த சம்பவங்களுடன் தங்களை ஈடுபடுத்திக் கொள்ளுவதில் பெருமை கொண்டவர்கள் போலத் தெரிகிறது. சங்க இலக்கியங்களில் இதைப்பற்றிய சில செய்திகள் வருகின்றன. மகாபாரதப் போரில் பங்கு கொண்டனர் பாண்டிய மன்னர்கள் என்ற செய்தி சொல்லப்படு கிறது.

பாண்டவர்களின் சார்பில் பாண்டிய மன்னன் ஒருவன் யானைப்படை நடத்திச் சென்றதாகச் சின்னமனூர் செப்பேடு கூறுகிறது. பாண்டிய மன்னர்கள் மகாபாரதத்தைத் தமிழில் மொழி பெயர்த்தார்கள் என்ற செய்தி கல்வெட்டுக் களில் சொல்லப்படுகிறது.

புராணகால நிகழ்ச்சிகளுக்கும் தங்களுக்கும் மிருந்த ஈடுபாடும் தொடர்பும் இருந்ததாகப் பாண்டியர்கள் கூறுவதாகத் தளவாய்புரச் செப் பேடுகள் கூறுகின்றன.

எனவே தெய்வங்களைப் பற்றிய புராண இதி காசச் செய்திகள் மிகப் பழங்காலத்தில் இருந்து சொல்லப்பட்டு வருகின்றன.

"இருநிலம் கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன்"

—[பெரும்பாணாற்றுப் படை 29-30] பெரிய நிலத்தைத் தனது திருவடிகளாலே அளந்தவன் திருவாகிய மறு என்ற பதக்கத்தைத் தனது மார்பிலே அணிந்தவன்; கடல் போன்ற நீல நிற வண்ணன்—திருமால்.

திருமால், திருமகள் உருவம் பொறித்த பதக்கத்தைத் தனது மார்பிலே அணிந்துள் ளான். திருமகளை எப்போதும் நெஞ்சிலே நினைத்துக்கொண்டிருக்கும் ஐதிகத்தில் அப் பதக்கத்தை அவன் அணிந்துள்ளான். அப்பதக் கத்தின் பெயர் ஸ்ரீ வத்ஸம். ஸ்ரீவத்ஸத்தில் இருப்பவள் திருமகளாகிய இலக்குமி. தன் கணவனுல் எப்போதும் விருப்பத்துடன் நினைக் கப்படுபவள். ஆகவே அவளுக்கு வத்ஸலா என்ற பெயர் அமைந்தது. வாத்ஸல்யம் உடையவள் வத்ஸலா.

சங்க இலக்கியங்களில் திருமாலைப்பற்றிய பல செய்திகள் காணப்படுகின்றன. திருமால் பயம் ஊட்டும் தெய்வமாகச் சில இடங்களில் கூறப்படுகின்ருர். இன்னும் சில இடங்களில் நன்மைகள் செய்யும் கடவுளாகச் சொல்லப்படு கின்ருர். மாநிலத்தின் — உலகத்தின் காவல ராக விளங்குகிருர் என மதுரைக் காஞ்சி என்ற சங்க இலக்கிய நூல் கூறுகிறது.

பெண்கள் தம் கணவரோடும், குழந்தை களோடும் சென்று காக்கும் கடவுளாகிய திரு மாலைப் பூவால் அர்ச்சனைசெய்து வழிபடுகின்ற னர். தூபப் புகை மணம் கமழுமாறு இடுகின் றனர்.

"கணம்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய ஓண நன்னுள்"

[மதுரைக் காஞ்சி — 590-591.] — அரக்கர் கூட்டத்தை வென்றவன்; பொன்மாலை அணிந் தவன் திருமால். இவனுக்குரிய ஓணம் நட்சத் திர நாளில் ஊர்மக்கள் திருவிழா எடுத்து வழி பாடு செய்வார்கள். ஓண நட்சத்திரம் என்பது திருவோண நட்சத்திரம்.

சிவபெருமானுக்குரிய நட்சத்திரம் திருவா திரை. மார்கழித்திருவாதிரை நடராசப் பெரு மானுக்கு விசேஷமானது. மார்கழித் திருவா திரையை ஆருத்ரா தரிசனம் என்று சொல்லு வார்கள்.

இந்த மாதத்தில், இரவு பத்து மணியளவில் தலைக்குமேல், சற்று மேற்குப்பக்கமாக வானத் தில் பார்த்தால் கட்டில் கால் போன்ற அமைப்பு உடைய நட்சத்திரக் கூட்டம் ஒன்று தென் படும். நடுவில் சேர்ந்தாற்போல் மூன்று நட்சத் திரங்கள் இருக்கும். நான்கு மூலைகளிலும் நான்கு நட்சத்திரங்கள் இருக்கும். இந்த மூலை நட்சத்திரங்களில் வடக்குப் பகுதியில் கிழக்கே அமைந்திருப்பதுதான் திருவாதிரை நட்சத்திரம். சற்று ஆரஞ்சு வண்ணத்தில் இருக்கும்.

இதேபோன்று முருகப் பெருமானுக்கு அமைந்த நட்சத்திரம் கார்த்திகை. திருமாலுக் குரியது திருவோணம். கேரளாவில் திருமாலா கிய கிருஷ்ணனைப் பிரதானமாக வணங்கு

கிறுர்கள். அங்கு ஓணம் பண்டிகை மிகவும் பிரசித்தமாகக் கொண்டாடப்படுகிறது.

ஆனல், அதே ஓணம் திருவிழா ஒரு காலத்தில் தமிழகம் முழுவதும் கொண்டாடப்பட்டது என்ற செய்தி சங்க இலக்கிய நூல்களால் தெரிய வருகிறது.

இந்திரன்: இந்து சமயத்தில் சொல்லப்படும் தெய்வங்களில் ஒருவன் இந்திரன். "வேந்தன் மேய தீம்புனல் உலகம்" என்று தொல்காப்பியர் கூறுகிறுர். வேந்தன் என்பவன் தேவேந்திரன். இந்திரன் வயலும் வயல் சார்ந்த இடமுமாகிய மருத நிலத்தின் கடவுள்.

பத்துப் பாட்டு, எட்டுத்தொகை முதலிய சங்க நூல்களுள் இந்திரனைப் பற்றிய செய்திகள் அதிகமாக இல்லை. ஒன்று இரண்டு இடங்களிலேயே சொல்லப்படுகின்றன. பத்துப் பாட்டு நூல்களில் இந்திரன் என்ற சொல் ஒரே ஓர் இடத்தில்தான் வருகிறது.

திருமுருகாற்றுப்படை சங்க காலத்திற்குச் சற்றுப் பிந்தின நூல். அந்நூலில் இந்திரனைப் பற்றிய செய்தி வருகிறது. "ஆயிரம் கண்களை உடையவன்; நூறு யாகங்களை நடத்தியவன்; நிறைந்த செல்வத்துக்கு அதிபதி. ஐராவதம் என்ற யானையின் மேல் ஏறி வருபவன்" என்று இந்திரன் சொல்லப்படுகிறுன்.

எட்டுத் தொகை நூல்களிலும் சில இடங்களில் மட்டும் இந்திரனைப் பற்றிய செய்திகள் சொல்லப்படுகின்றன. பிரகாசமான தொடி ஆபரணத்தை அணிந்தவன்; வச்சிராயுதப் படையை உடையவன் இந்திரன். அவனுக்குக் கோயில் கட்டி விழா நடத்தினுர்கள் என்ற செய்தி சொல்லப்படுகிறது.

சங்க காலத்திற்குப் பின்னல் வந்த சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்களில் இந்திரனைப் பற்றிய செய்திகள் சொல்லப்படுகின்றன. இந்திரனுக்குக் கோயில் கட்டி வழிபட்டார்கள் எனவும், திருவிழா நடாத்தினுர்கள் எனவும் சொல்லப்படுகிறது.

தமிழ் நாட்டில், ஆரும் நூற்றுண்டிற்குப் பிறகு இந்திரனை வழிபடும் வழக்கம் அறவே மறைந்து விட்டதாக அறிஞர்கள் கருதுகின்றனர்.

வருணன்: கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் நிலம். நெய்தல் நிலக்கடவுள் வருணன் ஆவான் எனத் தொல்காப்பியர் கூறுகின்றுர்.

ஆனல் சங்க இலக்கியங்களில் வருணனைப் பற்றிய செய்திகள் இல்லை. தொல்காப்பியத்தில் ஒரு நிலத்தின் கடவுளாகச் சொல்லப்பட்ட வருண பகவானைப்பற்றி ஒரு செய்தியும் சங்க இலக்கியங்களில் இடம் பெருமைக்குக் காரணம் தெரியவில்லை.

இலக்குமி [திரு] செல்வத்திற்குக் கடவுள் இலக்குமி என்னும் திரு. இலக்குமியைப்பற்றிச் சங்க நூல்கள் கூறுகின்றன. "மாதாங்கு தடக்கை, நீர்செல நிமிர்ந்த மா அல்" [முல்லைப் பாட்டு 2-3.]—திருமகளை மார்பிலே தாங்குகின்ற திருமால் என்று முல்லைப்பாட்டு கூறுகிறது.

"திருத்துஞ்சும் திண்காப்பு", "திருநிலை இய பெருமன் எயில்" [பட்டினப்பாலை.]—திரு என்ற இலக்குமி எப்போதும் நீங்காமல் வசிக்கின்ற பாதுகாப்பு அமைந்த வீடு எனவும், திருமகள் தங்கியிருக்கக் கூடிய காவல் அமைந்த மதில் என்றெல்லாம் பட்டினப்பாலை நூலில் திருமகள் கூறப்படுகிறுள்.

"ஓங்குநிலை வாயில், திருநிலை பெற்ற தீது தீர் சிறப்பு"—ஓங்கி உயர்ந்த நிலைகளை உடைய வாயில் அழகிய திருமகளின் உருவம் தீட்டப்பட்டுள்ளது; இதனல் தீமையில்லாத சிறப்புக்கள் உண்டாகின்றன என நெடுநல் வாடை நூல் கூறுகிறது.

"தொல்வலி நிலைஇய அணங்குடை நெடுநிலை"—திருமகளின் திருவுருவம் செதுக்கப்பட்ட வலிமை மிக்க மதில் கதவு என மதுரைக் காஞ்சி என்ற நூல் கூறுகிறது.

**சங்க நூல்களில் சொல்லப்படும் ஏனைய தெய்வங்கள்:**

பிரம்மனை வணங்கும் வழிபாட்டு முறை சங்க காலத்தில் இல்லை என்பது அறிஞர்களின் எண்ணம். பிரம்மனைப் பற்றிச் சொல்லப்படுகின்ற இடங்களிலும் அவனுக்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுத்ததாகத் தெரியவில்லை.

பிரம்மன் திருமாலின் மைந்தன்; படைப்புக் கடவுள்; துன்பங்களும் கலந்தே அவன் படைப்பில் உள்ளன—என்னும் சில செய்திகள் நான்முகனைப் பற்றிச் சொல்லப்படுகின்றன.

"கடல்வளர் புரிவளை புரையும் மேனி
அடல்வெந் நாஞ்சில் பனைக்கொடி யோனும்"

—கடலில் கிடக்கும் வெண்சங்கைப் போன்ற

வெண்ணிற மேனி உடையவன். நாஞ்சில் என்ற படையை உடையவன்; பனைக்கொடியை உடையவன் பலராமன் என்று [புறநானூறு 56] கூறுகிறது.

"பால்நிற உருவில் பனைக்கொடியோன்"

பால்போன்ற நிறத்தை உடையவன்; பனையைக் கொடியாகக் கொண்டவன் பலராமன் எனவும் [புறநானூறு 58] கூறப்படுகிறது.

சிவன், விஷ்ணு, முருகன், கொற்றவை ஆகிய தெய்வங்களைப் பெருந் தெய்வங்களாகவும், ஏனையவற்றைச் சிறுதெய்வங்களாகவும் கருதி வழிபடுகின்ற ஒரு மரபு தமிழ்நாட்டில் இருந்து வருகிறது. பெருந்தெய்வங்களையே வழிபடக் கூடியவர்களும் உள்ளனர். சிறு தெய்வங்களை வழிபடக் கூடியவர்களும் உள்ளனர்.

அம்முறையிலே, சிறுதெய்வங்களை வழிபடக் கூடிய வழக்கமும் சங்ககாலத்தில் இருந்து வந்துள்ளதைச் சங்க நூல்களால் அறியலாம். மலை, நீர், மரங்கள் ஆகியவற்றில் தெய்வம் உறைவதாக மக்கள் நம்பினர்.

"அணங்கு உடை நெடுங்கோடு," "அணங்கு கால் அடுக்கம்," "அருந்திறல் கடவுள் காக்கும் உயர் இமையம்" தீண்டி வருத்தும் தெய்வம் வசிக்கின்ற பெரியமலை; அத்தெய்வம் உறை கின்ற உயர்ந்த மலைச்சிகரம் என்றெல்லாம் தீண்டி வருத்தும் சிறு தெய்வத்தைப் பற்றிப் புலவர்கள் கூறுகின்றனர்.

"தெய்வம் உறையும் ஓர் ஆலமரத்தைப் பற்றிச் சொல்லும்போது, 'கடவுள் ஆலம் எனச் சொல்லுகிறது [புறநானூறு 199.] "கள்ளி நீழல் கடவுள் வாழ்த்தி"—கள்ளியின் நிழலில் உள்ள தெய்வங்களைப் பாணர்கள் தொழுவார் கள் எனப் [புறநானூறு 260] கூறுகிறது. "காடு உறை கடவுள்" காட்டுக்கு உரிய ஒரு கடவுளைக் காடு உறை கடவுள் எனப் பொரு நராற்றுப் படை இயம்புகிறது.

"வைதிகமதம், தேரவாதம் எனப்படும் பௌத்தமதம், சமணமதம் ஆகிய மதங்களின் கருத்துக்கள் தமிழ் நூல்களில் இடம் பெற்று உள்ளன. தமிழ் மக்களுக்கு என்று ஒரு தனிப் பட்ட மதம் இருந்தது. இந்த மதக் கருத்துக்க ளுடன் மேற்குறித்த சமயக் கருத்துக்களும் வந்து கலந்தன" என்பது ஆராய்ச்சியாளர் கருத்து.

"தமிழ் மொழியில் முருகன் சுப்பிரமணியன் ஆனான்; வள்ளியம்மையோடு தெய்வயானையும் சுப்பிரமணியனுக்கு மனைவிமார்கள் ஆனார்கள். சிவன் என்ற தமிழ்த்தெய்வம் உருத்திரன் என்ற வைதிகச் சமயப் பெயர் கொண்டான். கொற்றவையைச் சிவனுடைய மனைவியாக்கி னர். கொற்றவை, காளி, துர்க்கை ஆகிய பெண் தெய்வங்கள் பார்வதிதேவியின் வெவ் வேறு அம்சங்களாகக் கூறப்பட்டன. பார்வ திக்கும் சிவனுக்கும் குமாரனாக ஆறுமுகன் பிறந்தான். மாயோனாகிய திருமாலுக்கு இணை யாக விஷ்ணு இணைக்கப்பட்டான். இந்திரன், சந்திரன், பலதேவன், சூரியன் முதலிய தமிழ் நாட்டுத் தெய்வங்கள் மறக்கப்பட்டன. பிள்ளை யார்-விநாயகர் புதிய தெய்வமாகச் சேர்க்கப் பட்டார்." இவ்வாறு சங்கநூல்களுள் சொல்லப் பட்டு வந்த சமயக்கருத்துக்கள் மாறுபட்டு அமைந்தவிதத்தைக் கூறுகிறார் அறிஞர்ஒருவர்.

## ஆலயத்தினுள் கடைப்பிடிக்க வேண்டிய விதிகள்

ஒருவர் மற்றொருவருடன் பேசக்கூடாது. சந்நிதியை மறைக்காமல் நிற்கவேண்டும். கடவுளைப்பற்றிய விஷயந்தான் பேசப்படவேண்டும். வழிபாட்டில் மனதை முற்றிலும் ஒருமுகப்படுத்த வேண்டும். இருந்த இடத்திலிருந்தே பிரசாதம் பெற்றுக்கொள்ள வேண்டும். வரிசையாகச் சென்று பிறர்க்கு இடையூறு இல்லாமல் வழிபாடு செய்ய வேண்டும். ஆலயத்தினுள் எல்லா இடங்களையும் சுத்தமாக வைத்திருக்க ஒத்துழைக்க வேண்டும். தெய்வத்துக்கு நைவேத்தியமாகப் படைக்கும் உணவுப் பொருள்கள் மக்களுக் குப் பிரசாதமாக வழங்கப்படவேண்டும். ஆலயத்துக்குள் நுழையும்பொழுது கடவுளைப் பற்றிய சிந்தனையே சித்தமிசை குடிகொண்டிருத்தல் வேண்டும். உலக விஷயங்கள் எது வும் உள்ளத்தினுள் நுழைய அனுமதிக்கக் கூடாது.

# சரணாகதி

( சுவாமி துருவானந்தர் )

"கேளுங்கள் தரப்படும்; தட்டுங்கள் திறக்கப்படும்; தேடுங்கள் கிடைக்கும்" என்பது ஏசுநாதர் வாக்கு. இந்த அரிய வாக்கை எல்லாரும் அவரவர் அனுபவத்தில் கண்டு வருகிறோம். இன்பத்தை விரும்பித்தான் எல்லா உயிர்களும் உலகில் வாழ்ந்து வருகின்றன. துன்பத்தை யாரும் விரும்புவதில்லை. ஆனால் இன்பத்தை விடத் துன்பம்தான் உயிர்களை வெகு விரைவில் பக்குவப்படுத்துகிறது. இன்பமே வேண்டாம் என்று இருப்பவர்களுக்கு ஒரு துன்பமும் வருவதில்லை. இன்பத்தை நாடுவதுதான் எல்லாத் துன்பங்களுக்கும் காரணம். ஆதலால்தான் புத்தரும் ஆசையே துன்பங்களனைத்துக்கும் காரணம் என்றார். உலக வாழ்வு ஒரு விசித்திரமான வாழ்வு. எல்லாரும் தங்களுடைய ஆசையை நிறைவேற்றவே இப்பூவுலகில் பிறவி எடுத்துள்ளனர். ஆசையை நிறைவேற்ற, இன்பம் துய்க்க அவர்கள் எடுத்துக்கொள்ளும் பிரயத்தனம் இவ்வளவு அவ்வளவு அல்ல. தங்கள் ஆசையை நிறைவேற்ற அழுது, கதறிப் பதறுவது சிற்றுயிர்களிடமிருந்தே வடிவெடுக்க ஆரம்பிக்கிறது.

தெருவில் விற்றுக்கொண்டு போகும் தின்பண்டங்களை வாங்கிச் சாப்பிட வேண்டும் என்று சிறுமி ஒருத்தி நினைக்கிறாள். தந்தையிடம் கேட்கிறாள். தந்தை எரிந்து விழுகிறார். தாயிடம் சரணடைகிறாள். கெஞ்சுகிறாள். கண்ணீர்விட்டுக் கதறுகிறாள். அவளுடைய கோரிக்கை நிறைவேறுவதை உணருகிறாள். அதே சிறுமி போதிய மதிப்பெண் பெறாமையால் ஆசிரியையால் தண்டிக்கப்படுகிறாள். வேதனைப்படுகிறாள். அனைவரும் அவளை ஏசுகின்றனர். அப்போது அறிவு முதிர்ச்சி பெற்ற பாட்டி 'எல்லாம் நன்மைக்குத்தான்! இந்த மாதிரி கண்டித்தால்தான் நீ திருந்தி மேலும் நல்லவளாக ஆகமுடியும்' என்று அவளுக்குப் புத்தி புகட்டுகிறாள். அறிவு வளரப் பெற்ற அப்பெண் பெரியவளாகி மணம் புரிந்து புது வாழ்வில் புது அனுபவம் பெறச் செல்லுகின்றாள். விரும்பியதை வேண்டியவாறு அனுபவிக்க இப்பூவுலகில் நமக்குச் சுதந்திரமுண்டு. சிறு வயதிலே தன்னிஷ்டம்போல் வளர்ந்த சிறுமியின் பழக்கம் இங்கும் தொடர்கிறது. தன் இஷ்டம்போல் வாழுவது; சுகஜீவனத்தில் விருப்பம்; சோம்பலில் நாட்டம்; ஆடம்பர வாழ்வில் ஈடுபடுதல் முதலியன மிதமிஞ்சிப் போகின்றன. கணவன் வீட்டிலே அதற்கு எதிர்ப்புப் பிறக்கிறது. எல்லாருடைய கண்டனத்திற்கும் ஆளாகி, தான் சிறு வயதிலிருந்தே வளர்த்து வந்த பழக்கங்களை விட முடியாமல் திணறுகிறாள். மனதிற்கு ஆறுதல் தர ஆன்மீக நூல்கள் பயன்படுகின்றன. ஆழ்ந்து படிக்கிறாள். அனுஷ்டானத்தில் கொண்டுவர முயல்கிறாள். அன்று தின்பண்டத்திற்குத் தாயை அடைக்கலம் புகுந்தது போன்று, இன்று மனதிலிருக்கும் கொந்தளிப்பும், துயரமும் ஓய்ந்து சாந்தி மயமான அமிர்தத்தைப் பெற அம்பாளை வேண்டுகிறாள். அழுது புலம்புகிறாள். நாவல் புத்தகங்களில் நாளைக் கழித்துக்கொண்டிருந்த அம்மடந்தையின் மனம் அம்பாளின் பூஜை அறையைப் புகலிடமாகக் கொள்கிறது. உலகப் பொருளைப் பெறவேண்டுமென்று துடித்துக்கொண்டிருந்த அவள் மனம் இப்போது அருளைப் பெற வேண்டுமென்று ஆவலாயிருக்கிறது. ஆடம்பரம் மறைந்தது. எளிமையின் சின்னம் எப்போதும் இலங்குகிறது. ஒளி புகுந்தால் இருளுக்கு இடம் எங்கே? எங்கும் அம்பாளின் சான்னித்தியத்தைப் பார்த்த அம்மாதரசிக்குச் சேவையின் மேலாம் நிலை புலப்படுகிறது. அன்போடும், பணிவோடும், உற்சாகத்தோடும் சேவையில் ஈடுபடுகிறாள். முன்பு அவளைப் பார்ப்பதற்குக் கூட விரும்பாதவர்கள் இப்பொழுது அவளுடைய சத் சங்கத்தை நாடி வருவாராயினர். அகத்தில் ஏற்றப்பட்ட அருள் விளக்கு புறம் எங்கும்அருள் ஒளியைவீசி அனைவரையும் அருளாளர்களாக ஆக்கியது.

விசுவாசமுள்ள வேலைக்காரன் தன் எஜமானனின் ஆலோசனையை எதிர்பார்த்துக் காத்திருக்கிறான். பணிவுள்ள மாணவன் ஆசிரியருடைய அறவுரையைக் கேட்டு அதன்படி

நடந்து வருபவனாக இருக்கிறான். கற்புள்ள பெண் தன் கணவனின் எண்ணத்தை நிறைவேற்றும் சிறந்த கருவியாக இயங்குவதல்லாமல் அவனின் நிழல்போல அவனைச் சார்ந்து உள்ளாள். உலகில் ஒவ்வொருவரும் இங்ஙனம் தங்களுக்கு மேலாக உள்ள ஒருவரிடம் தங்களை ஒப்படைப்பது போன்று பக்தன் தன் வழிபடு தெய்வமாகிய இஷ்ட தெய்வத்திடம் தன்னை முற்றிலும் ஒப்படைத்து விடுகின்றான். தனக்கென்று எதையும் வைத்துக்கொள்ளாது எல்லாம் அவர் இச்சை என்ற எண்ணத்தில் அவன் நிலைபெற்றிருப்பதால் அவன் மூலம் நடக்கும் செயல்களனைத்தும் அவருடைய செயல்களே. இவற்றை ஆத்மீக நூல்களில் சரணாகதி தத்துவம் என்று பெயரிட்டு அழைக்கிறார்கள். கீதையின் உபதேச முடிவே சரணாகதியில்தான் முடிவடைகிறது. சரணாகதி ஒருவருக்கு வந்துவிட்டால் சகலமும் அடையப்பெற்றவராக அவர் மாறிவிடுவார் என்கிறார்கள் சான்றோர்கள். அந்தச்சரணாகதி என்பது ஏதோ எட்டாக் கனியென ஏங்கித் தவிக்கிறது நம் உள்ளம். எட்டாக்கனியாக இருந்தால் அதை அடைய முடியும் என்ற நம்பிக்கையே போய்விடும் அல்லவா! பெற்ற தாயைக் குழந்தை சார்ந்திருக்கிறது. ஆகவே குழந்தைக்குத் தேவையானவையனைத்தையும் தாய் கண்ணும் கருத்துமாகவிருந்து கவனித்துப் பராமரித்து வருகிறாள். பக்தன் தன் வழிபடு தெய்வத்திடம் தன் குறையைச் சொல்லி வேண்டுகிறான். அவனுடைய வேண்டுதல் நிறைவேறும் வரை பக்தனும் பகவானை விடுவதில்லை; பக்தனின் பக்திக்கு வசப்பட்ட அவர் அவனுக்கு வசப்பட்டுவிடுகிறார். ஆகவேதான் பக்தர் உலகம் பரமனை நச்சினார்க்கினியன் என்று புகழ்பாடித் துதிக்கிறது.

சிருஷ்டியின் மகிமையே அலாதியானது. அதனைத் துருவி ஆராய்பவருக்கு அது ஒரு ஒழுங்குப்பாட்டுக்கு உட்பட்டிருப்பதை அறிய முடியும். ஒழுங்குப்பாடே வடிவெடுத்துள்ள சூரிய சந்திர இயக்கங்களும் பக்தனின் சங்கல்பத்தை நிறைவேற்றத் தமது நிலைகளைக் கூடச் சிறிது மாற்றி அமைத்ததை அடியார்கள் வரலாறுகள் விளக்குகின்றன. தஞ்சாவூரை ஆண்ட மன்னர்களில் ஒருவர் சரபோஜி மன்னன். ஒருநாள் வழிபாடு முடித்துக் கோயிலிலிருந்து அவர் வெளியே வந்தபொழுது அவருக்கு ஒரு காட்சி தென்பட்டது. அம்பிகையின் அருளையே சார்ந்திருந்த பக்தர் அபிராமி பட்டர் ஆங்கு அமர்ந்திருந்தார். எல்லாரும் அரசனுக்கு எழுந்து மரியாதை செலுத்திய பொழுது அவர்மட்டும் தனக்கு மரியாதை செலுத்தாததை அறிந்த அரசன் அமைச்சரிடம் வினவினான். முற்றும் புறவுலக உணர்விலிருந்து விலகி அம்பாளின் திவ்விய ஒளியில் திளைத்திருந்த பட்டரின் மனநிலையை அரசனிடம் அமைச்சர் தெரிவித்தார். அரசன் இதை ஒருவாறு உணர்ந்தான் எனினும் எதையும் ஆராய்ந்தே முடிவெடுக்கும் இயல்பு படைத்த அவன் அப்பக்தரிடம் "இன்று என்ன நாள்? என்ன நட்சத்திரம்?" என்று கேட்டான். அகிலாண்ட நாயகியின் அருள் ஒளியில் மூழ்கியிருந்த அபிராமிபட்டர் பூர்ணசந்திர வடிவெடுத்த அவளுடைய தேஜஸ் சொருபத்தை உணர்ந்து இன்று பௌர்ணமி என வாய்விட்டுக் கூறினார். ஆனால் அன்றையதினம் சந்திரன் வரக்கூடாத தினமாகிய அமாவாசை தினம். பக்தரின் உரை அரசனுக்குச் சந்தேகத்தைக் கிளப்பியது. அமைச்சரிடம் இந்தக் கோமாளி எதையோ பிதற்றுகிறான். இவரை மகான் என்கிறீர்களே, என்னே உங்கள் மூடத்தனம் என்றான். அரசன் கூறிய சுடுசொற்கள் அமைச்சரின் உள்ளத்தில்கூறிய அம்புகளெனப் பாய்ந்தன. இருப்பினும் மறுபடியும் அமைச்சர் பக்தரை வினவ பக்தரும் திரும்பத் திரும்பத் தான் கண்டுகொண்டிருக்கும் நிலையைஉணர்ந்து இன்றைய தினம் முழு நிலாப் பௌர்ணமியே சந்தேகமேயில்லை. இது ஸத்யம் என்றார். அரசன் உடனே குறுக்கிட்டு இன்று இரவு முழுநிலவு வரவில்லையென்றால் நீ கொல்லப்படுவாய் என்று கூறிவிட்டுக் கோபாவேசமாகச் சென்றுவிட்டான்.

அரசன் போனபிறகு அபிராமிபட்டரிடம் உடன் நின்றவர்கள் அவர் பேசியதையும் அன்றைய தினம் அமாவாசை என்பதையும் ஞாபகப்படுத்தினார்கள். அனவரதமும் அம்பிகையைச் சார்ந்திருந்த தம் வாயில் ஒருநாளும் பொய்வராது. இது நடந்ததும் அம்பிகையின் அருளே என்று அவளைச்சார்ந்திருந்தார் பக்தர்.

பகல் கழிந்து இரவு வரும்வேளை நெருங்கவே அரசன் இட்ட ஆணையும் அவருக்கு ஞாபகத்திற்கு வரவே கருணைம்பிகையாகிய அம்பிகையை நினைந்து அன்றைய இரவில் நிலவினைக் காட்ட வேண்டும் என்று உருகி வேண்டிட எம்பெருமாட்டி காதில் போட்டிருக்கும் தோட்டைக் கழற்றி வானவெளியில் வீசி எறிந்தாள். அது நிலவாக மாறி ஆகாய வெளியில் நின்று ஒளியை வீசி உயிர்களை உற்சாகத்தில் திளைக்கச் செய்தது. உப்பரிகையில் உலாவிய அரசனும் அரசியும் அக்காட்சியைக் கண்டு வியப்புற்று நடந்ததை அறிந்து பக்தர் அபிராமிபட்டரின் காலில் வீழ்ந்து மன்னிப்புக் கோரினர். இது வரலாறு. ஆண்டவன் மீது கொண்டுள்ள விசுவாசத்தால் அற்புதம் நடக்கிறது என்பதற்கு இது போன்று ஏராளமான நிகழ்ச்சிகள் நடைபெற்றுள்ளன. இப்பொழுதும் தமிழ் நாட்டில் உள்ள மாரியம்மன் கோயில்களில் அவளுடைய பக்தர்களால் தீ மிதி என்று கூறப்படும் பெரிய குழியில் தீ மூட்டி முறையாக விரதம் மேற்கொண்ட அம்பிகை பக்தர்கள் அக்னியினுள் பிரவேசித்து ஆனந்தமாக ஆடிவருவது எவரையும் பிரமிக்கச் செய்யும். நாத்திகவாதம் பேசும் கும்பலும் ஏதோ ஒரு சக்தி இருந்துதான் இவர்களைக் காக்கிறது என்று எண்ணி மானசீகமாக வணங்கி வருவது கண்கூடு. கிறிஸ்தவ மதத்தைச் சார்ந்தவர்களும், முஸ்லீம்களும் இன்றும் தங்கள் வீட்டில் ஏற்படுகிற கஷ்டதசை, உடல் நலிவு, அம்மைநோய் முதலியவைகளுக்கு அம்பிகை கோயிலுக்குச் சென்று வேண்டுதல்கள் இருந்து, அவ்வேண்டுதல்களை நிறைவேற்றி வருவதைக் காணலாம். திருநாவுக்கரசு சுவாமிகளைச் சுண்ணும்புக் காளவாயில் போடும்படி ஆணையிட்டான் மன்னன். அருகில் நெருங்கவே முடியாதபடி எரிந்துகொண்டிருந்த சுண்ணம்புக் காளவாயினுள் அவரைத் தள்ளிவிட்டனர். இரண்டொரு நாட்கள் கழித்துக் காளவாயைத் திறந்து பார்த்தபோது ஆனந்தத்தில் திளைத்திருந்த நாவுக்கரசர் ‘மாசில் வீணையும் மாலை மதியமும், வீசு தென்றலும் வீங்கிள வேனிலும் மூசு வண்டறை பொய்கையும் போன்றதே ஈசன் எந்தை இணையடி நீழலே’ என ஆனந்தத் தாண்டவமாடி வந்தார். அன்று நடந்ததை நாம் சொல்லக் கேட்கிறோம், நூல்களில் படிக்கிறோம். ஆனல் இன்றும் அம்மன் மீதுள்ள விசுவாசத்தில், சில நாட்கள் முறையான விரதம் கடைப்பிடித்து அக்னிக் குழியில் குதித்து ஆனந்த நர்த்தனம் ஆடுகிறுர்கள் என்ருல் வாழ் நாளெல்லாம் வழிபாட்டிலே கழித்து ஆயுள் முழுதும் ஆருயிர்களுக்குத் தொண்டு செய்து வாழ்ந்த அப்பர் சுவாமிகளுக்கு எதுதான் என்ன செய்துவிடமுடியும் என்ற எண்ணம் தோன்றுகிறது. ‘அம்பிகையைச் சரண்புகுந்தால் அதிக வரம் பெறலாம்’ என்று அமரகவி பாரதி பாடியது சத்திய வாக்கன்றோ! நாமும் அவள் தாள் பணிந்து அவள் அருளைப் பெற முயல்வோமாக.

இன்றைக்குச் சபரிமலை அய்யப்பன் பிரசித்தி பெற்ற தெய்வமாக இருக்கிறுர். சபரிமலைக்குச் செல்லும் பக்தர்கள் ஆண்டுதோறும் பெருகிக் கொண்டே வருகின்றனர். விரதமிருந்து, பக்தி விசுவாசத்துடன் சபரிமலை யாத்திரை செய்யும் பக்தர்கள் முற்றும் அய்யப்பனிடம் தங்களை ஒப்படைப்பவர்களாயிருக்கின்றனர். கல்லும் முள்ளும், மேடும் பள்ளமும் கூடிய பாதையில் அய்யப்பன் நினைவில் ஆனந்தமாகச் செல்லுகின்றனர். கொடிய விலங்குகள் வாழும் காட்டுப்பாதையில் அச்சமின்றிச் செல்லுகின்றனர். அய்யப்பன் காப்பாற்றுவார் என்னும் நம்பிக்கையில் அய்யப்பனிடம் தங்களை முற்றும் ஒப்படைத்து விடுகின்றனர். இருமுடி தாங்கி, அய்யப்பன் நாமம் சொல்லி, அசையாத உள்ளம் படைத்த பக்தர்கள் கூட்டத்தைக் காண்பது அரிய காட்சியாகும். ‘ஒன்றே குலம், ஒருவனே தேவன்’ என்ற கோட்பாடு அய்யப்ப பக்தர்களிடம் முற்றும் கடைப்பிடிக்கப்படுகிறது. இத்தகைய பக்தர்களை அய்யப்பன் காப்பாற்றி வருகிறுர். இது இன்றைக்குக் கண்கூடாக நாம் காணும் காட்சியாகும்.

‘கடவுளை நம்பினோர் கைவிடப்படார்’ என்பது ஆப்த மொழியாகும். நாம் நம்மைத் தெய்வத்திடம் கொடுத்துவிடும் பொழுது அவர் நம்மை நிச்சயம் கைவிடுவதில்லை. ஆனல் நாம் நம்மை அவருக்குக் கொடுக்கும் செயலை அவ்வளவு சுலபத்தில் செய்து விடமுடியாது. அகங்காரம், ஆணவம் அகலும்பொழுதுதான் நாம் நம்மைத் தெய்வத்திடம் முற்றும் ஒப்படைக்க முடியும்.

---

# பரமஹம்சர் அருளிய பரவசநிலை

நாளெல்லாம் பக்தி பரவசத்தில் ஆழ்ந்திருந்த பரமஹம்சரின் நிலையைக் கண்ணுற்ற ராணி ராசமணியின் மருமகன் மதுரநாதருக்கு நாமும் அந்நிலையை அடையவேண்டும் என்ற அவா ஏற்பட்டது. பலமுறை இது விஷயமாக ஸ்ரீ ராமகிருஷ்ணரை மதுரநாதர் கேட்டுப்பார்த்தார். ஆனால் ஸ்ரீ ராமகிருஷ்ணர் மதுரநாதரின் வேண்டுகோளுக்கு இணங்காமல் "மதுரநாதரே, அவசரப்படவேண்டாம், பொறுமையாக இருங்கள். விதைபோட்ட உடனே முளைத்து, செடியாகி, மரமாகிக் கனிகொடுத்துவிடுமா? இப்போதுள்ள தங்கள் மனநிலையில் கடவுளுக்கும் உலகுக்கும் பணிசெய்து வருகிறீர்கள். இப்போதைக்கு உங்களுக்கு அதுதான் நல்லது. சரியான சமயத்தில் தேவியின் திருவருளால் தங்கள் விருப்பம் நிறைவேறும்" என்று சொன்னார். மதுரநாதரோ ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் விடாமல் தமது வேண்டுகோளைத் தெரிவித்து வற்புறுத்தி வந்தார். ஸ்ரீ ராமகிருஷ்ணரின் கருணையினால் சில தினங்களில் மதுரநாதருக்கு ஒரு வகையான சமாதி அனுபவம் ஏற்பட்டது. ஒருநாள்......திடீரென்று மதுரநாதரிடமிருந்து வேலையாள் ஒருவன் பதைபதைக்க ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் ஓடிவந்து, "ஐயா! மதுர்பாபு அவசரமாக உங்களைக் கையோடு அழைத்து வரச் சொல்லியிருக்கிறார்" என்று சொன்னான். விஷயத்தை யூகித்துக்கொண்ட ஸ்ரீ ராமகிருஷ்ணர் விரைந்து சென்றார். அங்கே மதுரநாதரின் நிலை மிகவும் பரிதாபகரமாக இருந்தது. ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் கண்டதும் மதுரநாதர் அவர் கால்களை இறுகப் பிடித்துக்கொண்டு, "தந்தையே! என்னை மன்னித்துவிடுங்கள். அறியாமையால் மதியிழந்து விட்டேன். உலக விஷயங்கள் எதிலும் ஈடுபட முடியாத நிலையில், காரியங்கள் எதையும் கவனிக்க முடியாது இருக்கிறேன். இப்பரவச நிலை என்னைப் போன்று உலகப் பற்றுள்ளவர்களுக்கு ஏற்றதன்று" என்று புலம்பியழுதார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் சிரித்துக்கொண்டே மதுரநாதரின் நெஞ்சைத் தடவிவிட, அவருடைய பரவசநிலை கலைந்தது. மனபரிபாகம் அடையாதவர்கள் பரவச நிலையில் நிலைத்திருக்க முடியாது என்ற உண்மையை இந்நிகழ்ச்சி நமக்குப் புகட்டுகிறது. நம்மை நாம் பக்குவப்படுத்திக் கொண்டே வர வேண்டும். நாம் எதற்குத் தகுதியுடையவர்களாகின்றோமோ, அது இறைவனருளால் நமக்கு நிச்சயம் கிடைக்கும். பரவசநிலையடைவதற்கேற்ற தகுதியை நாம் பெறவேண்டும்.

---

## செய்திகள்

**நிகழ்பவை:**

19—3—79 திங்கட்கிழமை யன்று இராமநாதபுரத்தில் நிகழும் தாயுமான சுவாமி தபோவனக் கட்டடவேலையை ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் பார்வை இடுவார்கள்.

ஏப்ரல் மாதம் 1 ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமையன்று பெங்களூர் ஸ்ரீ சாரதா சமிதி நர்சரி பள்ளியின் ஆண்டு விழாவில் ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் கலந்து கொள்வார்கள்.

ஏப்ரல் மாதம் 5 ஆம் தேதி வியாழக்கிழமை யன்று ஸ்ரீராம நவமியை முன்னிட்டுக் குருகுல மாணவர்கள் பகல் பன்னிரண்டு மணிநேரம் அகண்ட நாமபஜனையும் மாலை 6-30 மணிமுதல் 7-30மணிவரை ஐக்கிய வணக்கமும் செய்வார்கள்.

ஏப்ரல் மாதம் 7 ஆம் தேதி சனிக்கிழமை யன்று கரூர் பசுபதிபாளையம் விவேகானந்த கல்வி நிலயக் களிக்கூடக் குழந்தைகளின் ஆண்டு விழாவில் ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் கலந்துகொள்வார்கள்.

8—4—79 ஞாயிற்றுக்கிழமை யன்று மதுரை ஜில்லா கம்பத்தில் ஸ்ரீமத் அசலானந்த சுவாமிகள் ஒருநாள் அந்தர்யோகம் நடாத்துவார்கள்.

ஏப்ரல் மாதம் 15 ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை யன்று திருநெல்வேலி ஜில்லா இடிந்தகரையில் ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் அந்தர்யோகம் நடாத்துவார்கள்.

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

திருவாசகம்-மூன்றும் பதிப்பு
பிரசார விலை ரூ. 14-00
ஸ்ரீமத் பகவத்கீதை-பனிரண்டாம் பதிப்பு
பிரசார விலை ... 12-00
ஞானயோக விளக்கம் ... 8-00
ராஜயோக விளக்கம் ... 8-00
கர்மயோக விளக்கம் ... 7-00
பக்தியோக விளக்கம் ... 6-00
பரமஹம்சரின் பெருமை ... 6-00
விவேகானந்த விவரணம் ... 4-00
ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் ... 4-00
விவேகானந்த உபநிஷதம் ... 4-00
கடவுளின் வடிவங்கள் ... 4-00
சந்தேகம் தெளிதல் பாகம்-I ... 3-50
சந்தேகம் தெளிதல் பாகம்-II ... 3-50
அனுஷ்டான வேதாந்தம் ... 3-00
எதிர்கால இந்தியா ... 3-00
தினசரி தியானம்-பதினன்காம் பதிப்பு
(பிளாஸ்டிக் உறையுடன்)பிரசார விலை... 2-75
ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் ... 2-00
தேவரகசியம் (முதலிய கதைகள்) ... 2-00
ஸ்ரீ சாரதாதேவியாரது சரிதம் ... 2-00
கண்ணன் என்னும் கடவுள் ... 2-00

**தாயுமானவர் இயற்றிய**

பரிபூரணானந்தம் விரிவுரை ... 3-00
சின்மயானந்த குரு ஷ ... 3-00
ஆனந்தமானபரம் ஷ ... 3-00
சுகவாரி ஷ ... 3-00
மௌனகுரு வணக்கம் ஷ ... 3-00
எங்கும்நிறைகின்றபொருள் ஷ ... 2-50
பரசிவ வணக்கம் ஷ ... 1-00

விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) ... 1-50
பஜனைப் பாடல்கள் ... 1-50
சந்நியாசி ... 1-25
குழந்தைகளின் கவிக்கூடம் ... 1-00
இராவண தத்துவம் ... 1-00
சகோதரி நிவேதிதை ... 1-00
காயத்ரீ ... 1-00
வாலிமோக்ஷம் (நாடகம்) ... 1-00
தவப்புதல்வர்கள் (நாடகம்) ... 1-00
ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) ... 1-00
தானவீரன் கர்ணன் ... 1-00
பார்வதி.லக்ஷ்மி,சரஸ்வதி கர்வபங்கம் ... 1-00
நோய்க்கு இடம் கொடேல் ... 0-80

நன்மக்களைப் பெறுதல் ரூ. ... 0-80
பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) ... 0-80
ஆத்ம சக்தி ... 0-75
பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) ... 0-75
இறைவணக்கம் ... 0-75
செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? ... 0-75
*மனிதனது நிஜசொருபம் ... 0-70
*சக்தி தத்துவம் ... 0-70
*சிவ தத்துவம் ... 0-70
பிரஹ்லாதன் (நாடகம்) ... 0-65
*ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் ... 0-60
இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் ... 0-60
*ஆலய வழிபாடு ... 0-60
*சூரிய நாராயணன் ... 0-50
*முருகக் கடவுள் ... 0-50
*விஷ்ணு தத்துவம் ... 0-50
தெய்வீக மகிமைகள் ... 0-50
சைவன் யார்? ... 0-50
கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது ... 0-50
மார்க்கண்டேயன் (நாடகம்) ... 0-40
தபோபலன் (நாடகம்) ... 0-40
*கணபதி ... 0-40
நன்னெறிகளும் அருள்வாக்குகளும் ... 0-40
வர்ணாச்ரம தர்மம் ... 0-30
அருள்விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் ... 0-30
The Bhagavad Gita (9th Imp.) ... 15-00
The Indian National Education ... 8-00
Sri Lalithambika Sahasranama Stotram ... 8-00
Ramakrishna Lives Vedanta ... 8-00
Facets of Brahman or The Hindu Gods ... 5-00
Daily Divine Digest (DELUXE) ... 4-50
Daily Divine Digest (Ordinary) ... 2-50
Mahabharata (with plastic cover) ... 4-50
Ramayana (do) ... 4-00
The Man Making Message of Vivekananda (with plastic cover) ... 4-00
Sri Vishnu Sahasranama Stotram ... 4-00
Siva Sahasranama Stotram ... 3-50
The Bhagavad Gita (Small Size) with plastic cover ... 3-00
Holy Bible—In the Light of Vedanta ... 1-50
*Introducing the Gita ... 1-50
*Key to Higher Life ... 0-75
*The Teacher ... 0-60
*The Student ... 0-45

**தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-25ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-40ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள்.**

*இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

**DHARMA CHAKRAM**

*Statement about ownership and other particulars about Newspaper 'Dharma Chakram' to be published in the first issue every year after the last day of February.*

FORM IV

(See Rule 8)

| | | |
|---|---|---|
| 1. | Place of Publication : | Tirupparaitturai |
| 2. | Periodicity of its Publication : | Monthly |
| 3. | Printer's name : | Swami Sankarananda |
| | Nationality : | Indian |
| | Address : | Tapovanam Printing School, Tirupparaitturai-639 115, Tiruchi Dt. |
| 4. | Publisher's name : | Swami Sankarananda |
| | Nationality : | Indian |
| | Address : | Sri Ramakrishna Tapovanam, Tirupparaitturai-639 115, Tiruchi Dt. |
| 5. | Editor's name : | Swami Nithyananda |
| | Nationality : | Indian |
| | Address : | Sri Ramakrishna Tapovanam, Tirupparaitturai-639 115, Tiruchi Dt. |
| 6. | Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital : | Sri Ramakrishna Tapovanam Tirupparaitturai-639 115, Tiruchi Dt. |

*I, Sankarananda, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

Sankarananda
Signature of the publisher.

Date : 14—3—79

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.